*We are proud to announce that our deposit crosses more than one crore with the valuable support of our shareholders*



# சுலிவன் கார்டன் பெனிபிட் பண்டு லிமிடெட்

பதிவு அலுவலகம் : 8, கற்பகாம்பாள் நகர்,
மைலாப்பூர், சென்னை - 600 004. போன் : 4993241/4990953
கிளை அலுவலகம் : 132, ராசப்ப செட்டி தெரு,
பார்க் டவுன் (முதல் மாடி), சென்னை - 600 003. போன் : 563055

ரொக்க நடவடிக்கை : காலை 8.30 முதல் மாலை 5.30 வரை
ஞாயிறு காலை 8.30 முதல் பகல் 12.30 வரை
வரவு செலவுகள் அங்கத்தினர்களுடன் மட்டுமே
(வெள்ளிக் கிழமை விடுமுறை)

**கடன்** நகைகள் பேரில் கிராம் 10க்கு ரூ. 3000/- வழங்கப்படும்.

## இயக்குநர்கள்

| பெயர் | விலாசம் | தொழில் |
|---|---|---|
| திரு T.V. சீனிவாசன் | 15 லஸ் அவின்யூ<br>சென்னை - 4 | நிதி ஆலோசகர்<br>Formerly SBI |
| திரு P.K. சந்திரசேகரன் | 89 போயஸ் கார்டன்<br>சென்னை- 86 | P.K. வடிவேம்பாள் குரூப்<br>இரும்பு வியாபாரம் |
| திரு ப்ரவின் கோவிந்தராவ் | 22 போயஸ் கார்டன்<br>சென்னை - 86 | Architect<br>P.S. Govind Rao, Madras. |
| திருமதி P.C. சந்தரவதனி | 89 போயஸ் கார்டன்<br>சென்னை - 86 | சந்தரவதனி கல்யாண மண்டபம், எழும்பூர்,<br>சென்னை-7 ☎ 8281078 |
| திரு P.K.C. ரமேஷ் | 89 போயஸ் கார்டன்<br>சென்னை - 86 | பிரசாந்த் ஸ்டீல்ஸ் |
| திரு D. தனுஷ்கோடி | 21/1A பழைய குயவர்பாளையம்,<br>மதுரை - 625 009 | Nippon Furniture, Madurai. |
| திரு P.C. பாஸ்கர் | 89 போயஸ் கார்டன்<br>சென்னை - 86 | Annamalai Steels |
| திரு K.R. நிரஞ்ஜன் குமார் | 1 பின்னி ரோடு<br>சென்னை - 86 | K.V.R. பஸ் சர்வீஸ்<br>சென்னை. |
| திரு P.C. சியாம் சுந்தர் | 89 போயஸ் கார்டன்<br>சென்னை -86 | Deepu Steels |
| திரு K.G. கிருஷ்ணன் | Y-210, 2வது அவின்யூ<br>சென்னை - 40. | ஜெனரல் ஃபேப்ரி கேட்டர்ஸ் (பி) லிமிடெட் |

**சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டி**

...மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர்.

# காரியம் ஆகவேண்டுமா? கால்பக்க விளம்பரம் கொடுங்கள்!

தமிழக அரசிடம் உங்களுக்கு ஏதாவது காரியம் ஆக வேண்டுமா? மனுப் போட்டுப் பயனில்லை; கடிதங்கள் எழுதிக் கை ஓய்வதுடன் சரி. அப்படியானால் என்ன செய்ய வேண்டும்?

"மாண்பு மிகு தமிழக முதல்வர் டாக்டர் ஜெயலலிதா அவர்களுக்கு அன்பு வேண்டுகோள்" என்று தொடங்கி அவரு டைய கருணையையும் அன்பையும் போற் றித் துதி பாடி விட்டுப் பிறகு உங்கள் குறை யையும் கூறி, நாளிதழ்களில் கொட்டை எழுத்தில் குறைந்த பட்சம் ஒரு கால் பக்க விளம்பரம் தந்தால் காரியம் சித்தி ஆகி விடும்!

உதாரணம் வேண்டுமா? காட்டாங் குளத்தூருக்கு வரவும். இங்கே சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமத்தில் 250 குழந்தை களுக்கும் பெரியவர்களுக்கும் குடி தண்ணீர் வழங்கல் திடீரென்று நிறுத்தப்பட்டது. அனைவரும் தவித்துப் போனார்கள்.

தாம்பரம் நகராட்சி ஆணையருக்குத் தரப்பட்ட முறையீடு, சமூக நலத்துறை அமைச்சருக்கு அனுப்பப்பட்ட ஒன்பது கடிதங்கள், பத்துத் தந்திகள், முதலமைச் சருக்கு அனுப்பப்பட்ட கடிதம், தந்தி இவை எல்லாம் 'புதை பொருள்' ஆகிப் போயின!

ஆசிரம நிர்வாகியான ராஜாராமுக்கு ஒரு திடீர் ஐடியா தோன்றியது. நாளேடு களில் ஒரு கால் பக்க விளம்பர வடிவில் தமிழக முதல்வருக்கு வேண்டுகோள் விடுத் தார். இது இருபத்திநாலு மணி நேரத்துக்குள் பலன் தந்தது! சம்பந்தப்பட்டவர்களின் கவனத்தை ஈர்த்து மூன்று மாதங்களாக நிறுத்தப்பட்டிருந்த குடி நீர் வழங்கல் மீண்டும் தொடர்ந்தது!

ஆசிரமத்தைத் தொட்டுக் கொண்டு போகிற பாலாறு குடிநீர்க் குழாயிலிருந்து இவர்களுக்குத் தண்ணீர் விட அருகிலுள்ள மறைமலை நகருக்குக் காங்கிரஸ் மாநாட் டையொட்டி ராஜீவ் வரும் வரை காத்தி ருக்க வேண்டி வந்தது - பதினைந்து ஆண்டு களுக்கு மேல்! ஆசிரமக் குழந்தைகள் ராஜீவின் கவனத்தை ஈர்த்து 'வண்டலூர்க் காட்சி சாலை விலங்குகளுக்குக் கூடத் தண்ணீர் தருகிறார்கள். எங்களுக்குத் தரக் கூடாதா?' என்று கோரிக்கை வைத்து இருபத்து நான்கு மணி நேரத்தில் குடி தண்ணீர் இணைப்புப் பெற்றார்கள்.

அந்தக் குடிதண்ணீர் இணைப்புக்காக ஆண்டுக்கு நூறு, நூற்றைம்பது ரூபாய் மட்டுமே கட்டணமாகச் செலுத்தி வந்த சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம், கடந்த ஆண்டு ஜூன் முதல் ரூ. 10318- வரியாகச் செலுத்த வேண்டும் என்று தாம்பரம் நகராட்சியிடமிருந்து அதிர்ச்சி ஓலை வர, அதைத் தவிர்க்க உதவும்படி எழுதப்பட் டவைதான் மேலே சொன்ன கடிதங்கள் - தந்திகள்.

அவை எல்லாம் 'காணாமல் போன' நிலையில் ராஜாராமுக்குத் தோன்றியதுதான் இந்த Open Letter விளம்பர உத்தி. இது வேலை செய்தது படுபிரமாதமாய். சம்பந் தப்பட்டவர்கள் மீது நடவடிக்கை எடுக்கக் கூடத் தயார் என்றாராம் அமைச்சர். 'எனக் குத் தண்ணீர் வழங்குவது தடைப்படா விட்டால் அதுவே போதும் நியாயமான வரி செலுத்த நான் தயார்' என்று சொன் னாராம் ராஜாராம்.

தாற்காலிக இணைப்புதான் கொடுத் திருக்கிறார்கள். வரி குறைப்பா, தள்ளுபடியா என்பதைப் பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும்.

- 'யெஸ்'



...ம்,

சிவா...ந்த குருகுலக் குழந்தைக...



# இட ஒதுக்கீடு வெற்றியில் 'ஜெ' பங்கு எவ்வளவு?

● எஸ்.குமார், காரைக்குடி.

? டெண்டுல்கரின் சமீப சதம்?

! நூறு எட்டும் வரை மரபுக் கவிதை; அடுத்த பத்து, தளைகளை உடைத்தெறிந்து புறப்பட்ட புதுக்கவிதை.

● வி. ஆர். ரவிசந்திரன், வேப்பங்காடு.

? 'வெளிநாட்டு பத்திரிகை நிறுவனங்கள் நம் நாட்டில் பத்திரிகைகள் ஆரம்பித்தால் நம் நாட்டுப் பத்திரிகைகளைப் பாதிக்கும்' என்கிறாரே ஹிந்து ராம்?

! நம் நாட்டுப் பத்திரிகைகளை மட்டுமல்ல; நம் நாட்டையே பாதிக்கும். பத்திரிகை அதிபர்கள் தங்களிடம் உள்ள வசதிகளை அயல்நாட்டுப் பத்திரிகைகளுக்கு விற்று விட்டு நஷ்டப்படாமல் தப்பலாம் - கோகோ கோலாவிடம் பார்லே செய்தது போல. ஆனால் நமது பாரம்பரியம், பண்பாடு முதலியவற்றை மறந்து, முழுவதுமாக அயல்நாட்டு மோகத்தில் ஆழ்ந்து போவோம். ஏற்கெனவே ஸ்டார் டீவி, எம்.டீவி. போன்றவை படையெடுத்து தூர்தர்ஷனையும் மசாலா - முகாபாலாவாக்கி விட்டன. இனி பத்திரிகைகளும் ஏற்கெனவே தரம் கெட்டிருப்பது போதாதென்று முழுதுமாகச் சீர்கெடும். தரமான அயல்நாட்டுப் பத்திரிகைகளுக்குத் தங்குதடையின்றி வரவேற்புச் சொல்வதுடன் நிறுத்திக் கொள்ளலாம்.

● என். ரமேஷ், திருப்பாதிரிப்புலியூர். ❑

? வாக்காளருக்கு அடையாள அட்டை திட்டம் சரிப்பட்டு வருமா?

! 'வராது' என்கின்றனர் முதல்வர்கள். பணப் பிரச்னை முதலாவது. பணம் ஒதுக்கி, படம்பிடிக்கத் தயாராக புகைப்படக்காரர்கள் காத்திருந்தாலும் படம்பிடித்துக் கொள்ள மக்கள் முன் வரவில்லை என்பது இரண்டாவது காரணம். வாக்காளர் மெத்தனம் ஒருபுறம்; மறுபுறம் ஃபோட்டோ எடுத்துக் கொள்ள கூச்சப்படும் சுபாவம் இன்னும் கிராமப்புறங்களில் உள்ளது. கோஷா பற்றியோ அனைவரும் அறிவர். ஆக, அடையாள அட்டை இருந்தால்தான் வாக்குப் போடலாம் எனில் வாக்காளர் எண்ணிக்கையே மிகவும் குறைந்து விடக்கூடும். இது வோட்டுப் போடும் உரிமையை பாதிப்பதாக யாரும் வழக்குத் தொடுக்கலாம். சேஷன் சிந்திப்பது நல்லது.

● ஏ. சண்முகசுந்தரம், சென்னை.



• ஜலசமாதி...

? சுவாமி ஹரிதாஸ்கிரி சுவாமிகள் ஜலசமாதி அடைந்தது பற்றி...?

! நான் அது குறித்தும், அதன் பின்னர் நடந்ததாகப் பேசப்படும் அற்புதங்கள் குறித்தும் எண்ணிப் பார்க்க விரும்பவில்லை. மாறாக, மார்கழி பஜனைக்கு கியூவில் நின்ற மயிலைவாசிகளையும் அவர்களுடைய பேரிழப்பையும் எண்ணிப் பார்க்கிறேன். மனத்தை மயக்கி கண்ணனிடம் கட்டிப் போடும் ஆற்றல் அவர் நடத்திய பஜனைக்கு இருந்தது.

● எஸ். அருள்மொழி, காட்டுக்காஜூர்.

? அனுதாபம்; வருத்தம் - வித்தியாசம் என்ன?

❑. ரூ. 25 பரிசு பெறுபவர் :
என். ரமேஷ்,
44, ஸ்ரீனிவாச பிள்ளை தெரு,
கடலூர் -607 002.





! ஓங்கோல் அருகே நடந்த ரயில் விபத்தில் இறந்தவர்களின் குடும்பங்களுக்கு அனுதாபம். தப்பிப் பிழைத்தவர்களை மாற்று வாகனத்தில் ஏற்றி அனுப்பிய ரயில்வே நிர்வாகம், அவர்களின் உணவுக்கு வகை செய்யாமல் பசியில் துடிக்க வைத்ததில் வருத்தம்.

● **மேலை பழ. நாகப்பன், சென்னை.**

? ***"மற்ற பிரிவினர்" என்ற ஜெயின் உத்தரவு குறித்து உமது கருத்து?***

! 'குழப்பமானது' என்ற கருணாநிதியின் கருத்து ஏற்கத் தக்கதே. 'பொதுப் பிரிவு', 'ஒதுக்கீடு செய்யப்பட்ட பிரிவு' என்பதே சரி. பொதுப் பிரிவில் பிற்படுத்தப்பட்டவரும் விண்ணப்பிக்கலாம் என்பதே இன்றைய நிலை.

● **புளியரை கணேசன், சென்னை.**

? ***நான்கு நாடுகள் கிரிக்கெட் போட்டியில், முதல் ஆட்டத்திலேயே இலங்கையிடம் இந்தியா தோற்று இருக்க வேண்டுமா?***

! அது எனக்கு வியப்புத் தரவில்லை. ஸ்ரீலங்கா 3-0 எண்ணிக்கையில் ஆறு பாயிண்ட் எடுத்து இறுதி ஆட்டத்துக்குத் தகுதி பெற்றுவிட்டதே, அதுவல்லவா ஆச்சர்யம்!



• சிந்திப்பாரா?

● **எஸ். இலங்கேசுவரன், வேலூர்.**

? ***வை.கோ. எழுச்சி நடைப் பயணத்தின் போது எம்.ஜி.ஆர். படப் பாடல்கள் ஒலிபரப்பப்படுவது பற்றி...?***

! எம்.ஜி.ஆர். ஒரு பொதுச் சொத்து. அவரது படப் பாடல்கள் பல, அவரது நடிப்போ, அரசியலோ பிடிக்காதவர்களுக்குக் கூட ரசனையாக அமைந்து எழுச்சியூட்டும்.

● **ஆர். மணிவண்ணன், மல்லசமுத்திரம்.**

? ***69 சத இட ஒதுக்கீடு வெற்றியில் 'ஜெ' பங்கு எவ்வளவு?***

! 69%

● **எஸ். தனசேகரன், தூத்துக்குடி.**

? ***மறைந்த இலங்கை வானொலி அறிவிப்பாளர் கே. எஸ். ராஜா...***

! கவிதை கொஞ்சும் அவரது வேகமான உரைக்கோவைகளை இனி கேட்க முடியாதே என்று நினைத்தால்...

● **ஆர். சங்கரநாராயணன், குணசீலம்.**

? ***சமீபத்திய எரிச்சல்...?***

! களேபரங்களெல்லாம் முடிந்ததே என்று ஹாய்யாக திரைப்பட நகருக்கு ஒரு விசிட் அடித்தால், ஏராளப் பணிகள் இன்னும் முடிவடையாமை; ஊழியர்களின் அலட்சியப் போக்கு; எல்லாவற்றுக்கும் மேல் செக்யூரிட்டி அலுவலர்களுக்கு அ.தி.மு.க. டை!

● **கே. ஆர். உபேந்திரன், தஞ்சாவூர்.**

? ***தாங்கள் யாருக்குக் கடன்பட்டிருக்கிறீர்கள்?***

! இந்த வாரம் பாரதியார் சங்கத்துக்கு. இரு நாள் பாரதி விழாவில் முதல் தினம் தி. வேணுகோபால், பாரதியின் வாழ்க்கையையும் எழுத்தையும் பின்னிப் பின்னி பேசி, 'எழுதியது போல் வாழ்ந்தார்; வாழ்ந்த விதமாகவே எழுதினார்' என்று எடுத்துக்காட்டிய அழகு இருக்கிறதே, பாரதி பாணியிலேயே "அடடா, ஓ அடடா!" போடலாம், அதற்கு. எத்தகைய சொல்வன்மை! எத்தனை புதிய தகவல்கள்! எவ்வளவு மேற்கோள்கள்! ஐயா! "பாரதி என்ற மனிதன்" என்ற தங்கள் பேச்சை அப்படியே புத்தகமாக்கி விடுங்கள், பிளீஸ்!

இரண்டாம் நாள், "பாரதி கண்ட சக்தி" என்ற தலைப்பில், பாரதி, பெண்மையை எத்தனை கோணங்களில் சிறப்பித்துப் பார்த்தார் என்று அம்பிகா காமேஸ்வர் நாட்டிய நாடகம் நடத்திக் காட்டியதும் அற்புதமாய் இருந்தது.

● **பா. கிருஷ்ணகுமார், கோவில்பட்டி.**

? ***பிரபல தொழிலதிபர் விசுவநாதன் மறைவு...?***

! தொழில் துறைக்கு மட்டுமல்ல; கலைத் துறைக்கும் பெருநஷ்டம். என்ஃபீல்ட் மோட்டார் சைக்கிளை வைத்திருப்பதே பெருமை என்ற நிலையை உருவாக்கியவர். விசுவப் பிரியா நிதி நிறுவனம் வெற்றி நடை போட, விவசாயத் துறைக்கு உதவும் தொழில்கள் பக்கமும் கவனம் திரும்பும் போது அகால மரணமடைந்தார். ஆடல்-பாடல் கலைஞர்கள் பலருக்கு மேடையேற வாய்ப்பும் ஊக்குவிப்பும் அளித்த ஒரு கலை உள்ளத்தைப் பிரிந்து கலை உலகு கலங்குகிறது.



• கலங்குது கலை உலகு



• பொதுச் சொத்து

## திண்டுக்கல் :



# ஜெ. விசிட் பின்னே; நமது விசிட் முன்னே!

இந்த மாதம் 23-ஆம் தேதி பல கோடி ரூபாய்களுக்கான நலத்திட்ட உதவிகளைச் செய்வதற்காக அல்லது அறிவிப்பதற்காகத் திண்டுக்கல் போகிறார் ஜெ. அதற்கு முன்னதாக நாம் அங்கு போன போது நிரந்தர முதல்வரின் வருகைக்கு நகரமே தயாராகிக் கொண்டிருந்தது. அந்த 'பிஸி'யில் நிரந்தரப் பிரச்னைகளை மறந்து ஒருவித பரபரப்பில் வலம் வந்தனர் எல்லோரும். இதோ நமது விசிட் விவரங்கள் :

### கொசுக்களின் கோட்டை!

●● திண்டுக்கல். இருபத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாக இந்தத் தம்பிகளும் தங்கை(!)களும் ஆட்சி பீடம் ஏறுவதற்கு அஸ்திவாரம் போட்டுக் கொடுத்த அந்த அண்ணாவின் பெயரைக் கொண்ட மாவட்டத்தின் தலைநகரமாயிற்றே! நகரமே குபேர வளர்ச்சியில் குலுங்கிக் கொண்டிருக்கும் என்று நினைத்துக் கொண்டு போனது நம்முடைய தப்புத்தானே தவிர, அவர்கள் தப்பே அல்ல. 86-ல் 'மாதம் ஒரு மாவட்டம்' என்று நாம் திண்டுக்கல்லில் அலைந்த போது எப்படியிருந்ததோ இன்னமும் அப்படியேதான் இருக்கிறது; சொல்லப் போனால் சில விஷயங்களில் இன்னமும் மோசமாகிக் கொண்டிருக்கிறது.

உதாரணத்திற்கு அரண்மனைக் குளம். அது யாருக்குச் சொந்தம் என்பதிலேயே இன்னமும் குடுமிப்பிடி. விஷயம் கோர்ட்டுக்குப் போயிருந்தாலும் அங்கே கொசுக்களுக்குத் தடை போட கோர்ட்டாலும் முடியவில்லை என்பதால் அமோகமான கொசு உற்பத்தி. அவ்வப்போது நகராட்சியினர் அடிப்பதாகச் சொல்லும் மருந்தெல்லாம் டானிக் மாதிரி இருக்கிறதோ என்னவோ, திண்டுக்கல் மலைக் கோட்டையே கூட கொசுக் கடிகளால் அவஸ்தைப்படுவதாகக் கேள்வி!

### ஆஜர், ஆக்கிரமிப்பாளர்கள்!

●● கோபாலசமுத்திரம். நகரின் மையத்திலுள்ள அரசு மருத்துவமனையை ஒட்டியிருக்கிறது இந்தத் தடாகம். மருத்துவமனையின் விரிவாக்கம் கருதி ஒரு பகுதி ஆக்ரமிப்புகளை மனமுவந்து அகற்றி மருத்துவமனைக்குக் கொடுத்திருக்கிறது, நகராட்சி. உதவியர்கள் இளைஞர் நற்பணி மன்றத்தினர். விரிவாக்கம் ஒருபுறமிருக்கட்டும், முதலில் வெறிநாய்க்கடிக்கான மருந்து கூட ஸ்டாக் இல்லையே மருத்துவமனையில் என்று கேட்பது அபசாரம். அது சரி, கோபால சமுத்திரத்தின் மற்ற கரைகளிலுள்ள ஆக்ரமிப்புகளை எப்போது அகற்றப் போகிறது நகராட்சி? "ஆக்ரமிப்பா? அங்கெல்லாம் ஆக்ரமிப்பு இருப்பதாகத் தெரியவில்லையே!" என்கிறார், கமிஷனர் நடேசன். "இருக்கிறது சார்!" என்று சுட்டிக்காட்டினால், "பார்க்கிறேன்!" என்கிறார். இவர் பார்த்துத் தெரிந்து கொள்வதற்குள் ஒன்று, சம்பந்தப்பட்டவர்களுக்குப் பட்டா கிடைத்து விடும். அல்லது இவருக்கு மாறுதல் கிடைத்து விடும் என்பதுதானே யதார்த்தம்!





• மலைக் கோட்டை

• குமரன்பூங்கா

## குமரனே காப்பார்!

●● குமரன் பூங்கா. கொடியையே காக்கத் தெரிந்த குமரனுக்குப் பூங்காவைக் காக்கத் தெரியாதா என்று நகராட்சி நினைத்து விட்டதால், பக்கத்தில் போனாலே குமட்டிக் கொண்டு வருகிறது. பக்கத்து ஜனங்களின் கழிப்பிடமாகப் பயன்படுத்தப்படுவது நகராட்சிக்கல்லவா கேவலம் என்று கட்சிக்காரர் யாராவது கொதித்தெழுந்து பிளாட் போட்டு விற்காமலிருக்கிறாரே, அதுவே பெரிய விஷயம்தான். நிச்சயம் பாராட்டித்தான் ஆக வேண்டும்.

## அரசியலால் அசைக்க முடியாத ஒற்றுமை!

●● திண்டுக்கல் மலைக்கோட்டையை 1605-ல் கட்டியவர் முத்துகிருஷ்ணப்ப நாயக்கர். கோட்டையில் ஒரு கோயிலையும் கட்டி அபிராமி அன்னையையும் பத்மகிரி நாதரையும் பிரதிஷ்டை செய்தார். பக்தர்கள் கோட்டைக் கோயிலுக்குச் செல்ல வசதியாக மலைப் பாறையில் படிக்கட்டுகளை அமைத்தார் ராணி மங்கம்மாள். பிறகு கோட்டை திப்புசுல்தான் வசமான போது, பக்தர்கள் வேஷத்தில் உளவாளிகள் கோட்டைக்குள் நுழையக் கூடும் என்று சந்தேகித்த திப்புசுல்தான், அபிராமியையும் பத்மகிரிநாதரையும் அல்லாக்காகப் பெயர்த்தெடுத்து வந்து, நகருக்குள்ளிருக்கும் காளகத்தீஸ்வரர் ஆலயத்தில் பிரதிஷ்டை செய்து விட்டார்.

மத நல்லிணக்கத்தை நீண்ட நெடுங்காலமாகக் கடைப்பிடித்து வருகிறார்கள் திண்டுக்கல் மக்கள். நகராட்சித் தேர்தல்களின் போது ஒருமுறை இந்து, ஒருமுறை முஸ்லிம், பிறகு கிறிஸ்துவர் என்று மாறி மாறித் தலைவர்களைத் தேர்ந்தெடுப்பதையே ஒரு மரபாகக் கடைப்பிடித்து வருகிறார்கள். இடையில் இந்து சமயத்தை ரட்சிப்பதற்காகவே தாங்கள் அவதாரமெடுத்திருப்பது போல் பிரகடனப்படுத்திக் கொள்ளும் கட்சிக்காரர்கள் புகுந்து குட்டையைக் குழப்பி மீன் பிடிக்கப் பார்த்தார்கள். முடியவில்லை; வலை அறுபட்டுப் போனதுதான் மிச்சம்! "அண்மையில் நடந்த காளியம்மன் கோயில் குடமுழுக்கு விழாவில் கூட கிறிஸ்துவப் பெரியார்களும் நாங்களும் கலந்து கொண்டு நடத்தினோம்!" என்கிறார் திருவருட்பேரவையின் பொருளாளரான என். சாகுல் ஹமீது.



• சாகுல்ஹமீது



• சித்ரா நாகராஜன்



• கோட்டை மேலுள்ள கோயில்

## இதோ, ஆச்சு, செய்துடுவேன்!

●● திண்டுக்கல் நகரில் ஏகப்பட்ட வீடியோ கேம்ஸ்; அதாவது சூதாட்டக் கடைகள். அதனால் தங்களது பையன்கள் பள்ளிகளுக்குத்தான் போயிருக்கிறார்களா என்று பெற்றோர்கள் ஒரு முறைக்கு இருமுறையாகச் சரிபார்த்துக் கொள்ள வேண்டிய சூழ்நிலை. "இது மாதிரியான நிலை இங்கே சைலேந்திரபாபு எஸ்.பியாக இருந்த போது கிடையவே கிடையாது!" என்கிறார்கள் பலரும். இன்றைய எஸ்.பியான லல்லேம்சன் காவிடம் கேட்ட போது, "இளைஞர்களின் திறமையை வெளிக்காட்டும் வீடியோ கேம்ஸை அனுமதிக்கலாம் என்று கோர்ட்டே அனுமதித்திருக்கிறதே!" என்கிறார். "திண்டுக்கல்லில் அப்படிப்பட்ட வீடியோ கேம்ஸா நடக்கின்றன?" என்றால் "நிச்சயமாக இல்லை; சூதாட்டம்தான்!" என்கிறார். அப்புறம் அவற்றை அப்புறப்படுத்துவதில் என்ன தடை? "இதோ செய்யப் போகிறேன்!" என்கிறார். செய்வாரா இல்லையா என்பதை திண்டுக்கல்லுக்கு விசிட் அடிக்கும் ஜெ.தான் செக்கப் செய்ய வேண்டும்.

●● திண்டுக்கல்லில் உள்ள சர்க்கரை வியாதிக்காரர்களுக்கு ஓர் ஆறுதல். டாக்டர் முரளிதரன் அவ்வப்போது இலவச மருத்துவ முகாம்கள் நடத்தி செக்கப் செய்கிறார். சர்க்கரை வியாதி வராமலிருக்கவும் வந்த பிறகு கட்டுப்படுத்தவும் வகுப்புகள் எடுக்கிறார். காரணம், "மனிதர்களுக்கு வரும் பெரும்பாலான வியாதிகளுக்குச் சர்க்கரை வியாதிதான் மூலகாரணம்! அதைக் கட்டுக்குள் கொண்டு வந்து விட்டாலே பல வியாதிகள் கட்டுப்படுத்தப்பட்டு விடுமே!" என்கிறார் முரளிதரன்.



• டாக்டர் முரளிதரன்

## 200 கார்களுடன் வந்த கண்ணப்பன்!

●● அன்றைய விக்டோரியா மகாராணி விசிட் அடித்த போது, அவருக்குக் கீழே சேவகம் பார்த்தவர்கள் என்ன பாடுபட்டிருப்பார்களோ நமக்குத் தெரியாது. ஆனால், இன்றைய முதல்வரின் விசிட்டுக்கு என்ன பாடுபடுகிறார்கள் என்பது கண்கூடு. திண்டுக்கல்லில் நமக்கும் அந்த அனுபவம் ஏற்பட்டது! தமது தலைவியின் விசிட் எப்படி அமைய வேண்டும் என்பதை அதிகாரிகளிடம் விளக்கிச் சொல்ல வந்த அமைச்சர் கண்ணப்பனுக்கே இருநூறு கார்கள் பவனி என்றால், தலைவிக்கு எத்தனை என்பதைக் கற்பனை செய்து கொள்வதைத் தவிர, வேறு வழியில்லை.



• ஆராவமுதன்



• பால் பாஸ்கர்

## இதற்கென்ன தீர்வு?

●● திண்டுக்கல்லைச் சுற்றியுள்ள தோல் பதனிடும் தொழிற்சாலைகளால்தான் நிலத்தடி நீர் கெட்டுப் போனது. "இதை உணர்ந்துதான் நாங்கள் இப்போது முதல் கட்டமாக மாசுநீர் சுத்திகரிப்பு நிலையம் ஒன்றைக் கட்டிக் கொண்டிருக்கிறோம். வரும் டிசம்பரில் இது செயல்படத் துவங்கி விடும்!" என்கிறார் திண்டுக்கல் தோல் பதனிடும் தொழிலகங்களின் கழிவுநீர் சுத்திகரிப்பு நிலையத்தின் நிர்வாக இயக்குனர் ஆர். ஆராவமுதன். அடுத்த கட்ட சுத்திகரிப்பு நிலையமும் செயல்படத் துவங்கும் போது எல்லாமே சரியாகி விடும் என்பது அவரது நம்பிக்கை. ஆயினும் "தோல் பதனிடும் தொழிலகங்களிலிருந்து வெளியேறும் திடக் கழிவுப் பொருள்களை என்ன செய்யப் போகிறார்கள் - எப்படி சுத்திகரிக்கப் போகிறார்கள், என்பதற்கு இன்னமும் பதிலில்லையே!" என்கிறார் சமூக சேவகரான ஜெ. பால் பாஸ்கர்.

## நிஜ சமத்துவம்!

●● *திண்டுக்கல்லில் உள்ள கடைநிலை ஊழியர்களுக்கு உதவுவதற்காகவே ஏராளமான அறக்கட்டளைகளை நிறுவி உதவி வருகிறவர் ஜி.எஸ். என்று சொல்லப்படும் ஜி. சுந்தரராஜன். மளிகை வியாபாரம் செய்யும் இவருக்கு இப்படியொரு விசால மனத்துக்கு எது காரணம்? "நான் பள்ளிக்கூடத்தில் படிக்கும் போது, மாதம் நான்கு ரூபாய் பீஸ். அதைக் கட்ட முடியாத வறுமை எனக்கு. அதனால், எனது பீஸை எனது ஆசிரியர் ராஜகோபாலசர்மாவே கட்டி விடுவார். அதற்குப் பிரதிபலனாக நான் அவரது வீட்டுக்குச் சென்று, அவருடைய வீட்டு வேலைகளில் உதவி செய்வேன். என்போன்ற நிலை இன்றைக்கு யாருக்கும் வரக்கூடாதில்லையா? அதற்குத்தான்!" என்கிறார் சர்வ சாதாரணமாக. இதோடு, கடைநிலை ஊழியர்களையெல்லாம் லயன்ஸ் கிளப்புக்குள் அழைத்து விருந்து பரிமாறிச் சமத்துவத்தைக் கடைப்பிடிப்பவர் இவர்!*

• ஜி. சுந்தரராஜன்



• முல்லைக்கொடி

## 'ஐயா, தர்மம் கொடுக்கிறோம்... வாங்கிக்கங்க!'

●● ஜெ.யிடமிருந்து நலத்திட்ட உதவிகள் பெறுவோர் பட்டியலில் 45,000 பேர்தான் (கூட்டுத் தொகை ஒன்பது) இருந்தார்களாம். பார்த்த சேடப்பட்டி முத்தையா குறைந்தது 50,000 பேராவது இருக்க வேண்டாமா என்று ஓர் உறுமல் போட, அதிகாரிகள் பயந்து போய் விட்டார்கள். மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலக வளாகத்துக்குள் சென்றிருந்த போது, ஏதோ அறுவைச் சிகிச்சைக்கு ஆள்பிடிக்கிற மாதிரி, சமூகநலத் துறை அதிகாரிகள் ஊருக்கு ஊர் டெலிபோன் செய்து ஆங்காங்குள்ள அதிகாரிகளிடம் நபர்களைப் பிடிக்க விரட்டிக் கொண்டிருந்தார்கள். வேஷ்டி கட்டிக் கொண்டு சென்றிருந்தோமானால், எங்களையும் பட்டியலில் சேர்த்துக் கொண்டிருந்திருப்பார்கள்!

## இந்த முல்லைக் கொடிக்கு ஒரு கூரையாவது கொடுங்கள்!

●● திண்டுக்கல் வடக்கு ரத வீதியில் ஒரு சைக்கிள் கடை. முல்லைக் கொடி, கிரிஜா ஆகிய சகோதரிகள் நடத்தும் கடை. சட்டங்கள் ஆள்வதற்கும் பட்டங்கள் செய்வதற்கும் வறுமை இடம் தராததால் சைக்கிள் கடை நடத்திக் கொண்டிருக்கிறார்கள். "வங்கிக் கடனில் பத்து சைக்கிள்கள் வாங்கினேன். இப்போது கடனையும் அடைத்து விட்டேன். இன்னும் 360 ரூபாய் தான் பாக்கி!" என்கிறார், முல்லைக்கொடி. அப்பாவுக்கு ஒரு விபத்து ஏற்பட்டு விட்டதால் சைக்கிள் கடையைச் சகோதரிகள் பார்த்துக் கொள்ளத் துவங்கினார்கள். அது சரி, ஒரு சின்ன இடமாகப் பிடித்து அதில் கடை வைத்து நடத்தக் கூடாதோ! இப்படியா ரோட்டோரத்தில் நடத்துவது? "அதற்கெல்லாம் வசதி வேணுங்களே!" என்கிறார் முல்லைக் கொடி. அன்றைய முல்லைக் கொடிக்குத் தேரையே ஈந்தான் பாரி. இன்றைய முல்லைக் கொடிக்கு யாராவது (கடை வைக்க) ஒரு கூரையாவது ஈயக் கூடாதோ!

## பத்தா? பன்னிரண்டா?

●● இந்த மாதம் 23-ம் தேதி நமது மாண்புமிகு முதல்வர் திண்டுக்கல் நகரில் எழுந்தருளப் போகிறார் என்பதாலோ என்னவோ, காங்கிரஸ் காலத்தில் சிமெண்டால் கட்டப்பட்ட சாக்கடைக் கால்வாயை உடைக்க முடியாமல் உடைத்து விட்டு, இப்போது புதிதாக மணல் கொண்டு கட்டிக் கொண்டிருக்கிறார்கள். ஆமாம்; ஒன்றுக்குப் பத்து என்கிற விகிதத்தில் சிமெண்ட்டும் மணலும் கலந்து கட்டப்பட்டால் பின் எப்படிச் சொல்வது? காரணம்? ''வருகிறவர்களுக்கெல்லாம் 'அழுது' தொலைக்க வேண்டியிருக்கிற நிலையில், ஒன்றுக்குப் பத்து என்பது கூட எனக்குக் கட்டுபடியாகாது சார்! பன்னிரண்டு போட்டிருக்க வேண்டும்; என் மனச் சாட்சி கேட்கலை. அதனால் தான் பத்து!'' என்று சொன்னார் பெயர் சொல்ல விரும்பாத ஒரு காண்ட்ராக்டர்.

''அப்படியா! அப்படியெல்லாம் இல்லையே! வேண்டுமானால் இதோ... அருகிலிருக்கும் நகராட்சிப் பொறியாளரையே கேட்கலாமே!'' என்றார், கமிஷனர். பொறியாளரோ, ''அப்படியெல்லாம் கிடையவே கிடையாது!'' என்று அடித்துச் சொன்னார். நிஜம்தான் என்று நாமும் அடித்துச் சொன்ன போது, ''நேரில் பார்த்து நடவடிக்கை எடுக்கிறேன்!'' என்றார் கமிஷனர்.

என்ன நடவடிக்கை? உள்ளம் 'கவர்' கள்ளன்களைக் கட்டுப்படுத்தவா முடியும்?




• சாக்கடைக் கால்வாய் : ஒன்றுக்குப் பத்தில்?

# ‘ஜே’ ‘ஜே’ வென்று ஜெவுக்கு மனு!

●● திண்டுக்கல் நகருக்குப் பேரணையிலிருந்தும் ஆத்தூரிலிருந்தும் குடிநீர் வருகிறது. அதாவது இரண்டு குடிநீர்த் திட்டங்கள். நாளொன்றுக்குத் தலா எழுபது லிட்டர் குடிநீர் விநியோகிக்கப்படுவதாக நகராட்சிக் கமிஷனரும் சொல்கிறார். மக்களிடம் கேட்டாலோ ''அந்த வயிற்றெரிச்சலைக் கிளறாதீர்கள்!'' என்கிறார்கள். நகரின் மையப் பகுதிகளில் கமிஷனரின் புள்ளி விவரம் சரியாக இருந்தாலும் மற்ற பகுதிகளில் இல்லை. அரசு அலுவலர்களும் கொஞ்சம் வசதியானவர்களும் குடியிருக்கும் ராணி மங்கம்மாள் நகருக்குப் பதினைந்து நாட்களுக்கு ஒருமுறை குடிநீர் சப்ளை வந்தாலே அதிசயம்! இந்த நிலையில் ரொம்ப தூரம் வரை போய் எடுத்து வர குடும்பத் தலைவிகளால் முடியாது என்பதால் வேலைக்காரிகளும் சேர்ந்து கஷ்டப்படுகிறார்கள்.

அறுபத்தைந்து கி.மீ. தூரத்திலிருந்து வரும் பேரணைக் குடிநீர்க் குழாய்கள் சமர்த்தாக இருந்தாலும் வெறும் 25 கி.மீ. தூரத்திலிருந்து வரும் ஆத்தூர் குடிநீர்த் திட்டக் குழாய்கள், அடிக்கடி உடைப்பெடுத்துக் கொண்டு மக்கர் செய்கின்றன. குழாய்களைப் பதித்த குடிநீர் வடிகால் வாரியத்தினர், அந்த வேலையை அப்படியொரு 'பக்கா'வாகச் செய்து நகராட்சியின் தலையில் கட்டி விட்டுப் போய் விட்டார்கள். பாவம், கமிஷனர் தான் இப்போது பதில் சொல்லத் திணறுகிறார்.

நகரை ஒட்டியுள்ள என்.ஜி.ஓ. காலனி படு மோசம். நிலத்தடி நீரை வாயில் வைக்க முடியவில்லை. பஞ்சாயத்தாலும் ஒன்றும் செய்ய முடியவில்லை. ''எங்கள் காலனியைத் தாண்டியுள்ள ரிசர்வ் போலீஸ் குடியிருப்புக்கு நகராட்சி தான் குழாய் மூலம் குடிநீர் சப்ளை செய்கிறது. இந்த நிலையில் எங்களுக்கும் நகராட்சி (பதினைந்து நாட்களுக்கு ஒருமுறை என்றாலும் பரவாயில்லை!) கொடுக்கலாமே!'' இது அந்தக் காலனியைச் சேர்ந்த திருமதி சித்ரா நாகராஜனின் கேள்வி. ''ரிசர்வ் போலீஸ் குடியிருப்பும் பஞ்சாயத்தைச் சேர்ந்ததுதான் என்றாலும் அதற்குக் குடிநீர் வழங்கச் சொல்லி மேலிட உத்தரவு இருக்கிறது. அதனால்தான் நகராட்சி வழங்குகிறது. இவர்களும் அப்படியோர் உத்தரவைப் பெற்றுக் கொண்டு வந்தால் வழங்கத் தயார்!'' என்பது கமிஷனரின் பதில்.

ஆக, என்.ஜி.ஓ. காலனிப் பெண்கள் 'ஜேஜே' என்று ஒன்று இரண்டு ஜெயிடம் மனுக்கொடுத்துப் பார்ப்பதொன்றுதான் வழி போல் இருக்கிறது!

• ஜெ. விசிட் : மரங்களுக்கு ஆபத்து

# மரக்கிளைகளே, கெட் அவுட்!

●● திண்டுக்கல் நகருக்குள் ஹெலிகாப்டர் மூலமாக ஜெ. போய் இறங்குவதற்கு ஒரு ஹெலிபேட். அங்கிருந்து திருவிழா மேடைக்குச் சென்று வாரி வழங்கிப் பேசிய பிறகு, அங்கிருந்தே பறப்பதற்கு வசதியாக மேடைக்கு அருகிலேயே இன்னொரு ஹெலிபேட். இது மட்டுமா? முதல்வரின் முன்னால் அமைச்சர்களெல்லாம் கைகளைக் கட்டிக் கொண்டு நிற்கும் போது, பாதையிலுள்ள மரங்கள் கிளைகளை நீட்டிக் கொண்டிருப்பது எவ்வளவு பெரிய அபசாரம்! அதனால் கிளை நீட்டிய மரங்களையெல்லாம் ஒரு கை பார்த்துக் கொண்டிருந்தார்கள் அதிகாரிகள்.

# கம்ப்யூட்டருக்குள் பூட்டி வைப்போம்!

●● பெரிய பெரிய கம்பெனிப் பூட்டுகளின் தொழில் நுட்பங்களையெல்லாம் தூக்கிச் சாப்பிடும் தொழில்நுட்பங்களைக் கொண்டவை திண்டுக்கல் பூட்டுகள். திறந்த சாவியால் பூட்ட முடியாது; பூட்டிய சாவியால் திறக்க முடியாது... இப்படி ஏராளமான தொழில் நுட்பங்கள். சிங்கப்பூரிலிருந்து வந்து, இவர்களின் தொழில்நுட்பங்களை விலைபேசிக் கொண்டிருக்கிறார்கள் சில வியாபாரிகள். ஆயினும் நமது அரசாங்கம் அந்தப் பூட்டுத் தொழிலாளர்களைக் கண்டுகொள்ளாமலிருப்பதால், இத்தனை நுணுக்கமான தொழில்நுட்பம் அழிந்து விடும் அபாயத்திலிருக்கிறது. ''குறைந்தபட்சம் இங்குள்ள தொழிலாளர்களின் உதவியுடன் இந்தத் தொழில்நுட்பத்தைக் கம்ப்யூட்டர் பிளாப்பிகளில் பதிவு செய்து பத்திரப்படுத்தவாவது அரசாங்கம் முயல வேண்டும்!'' என்று சொல்கிறார் திண்டுக்கல் பூட்டு வியாபாரத்தில் ஈடுபட்டுள்ள இளைஞர் மருதநாயகம்.



• மருதநாயகம்



• லல்லேம் சன்கா

## இரண்டாவது திறப்பு விழா!

●● திண்டுக்கல்லில் ஏற்கெனவே ஒரு மகளிர் காவல் நிலையம் செயல்பட ஆரம்பித்து விட்டது. அதன் செயல்பாடு பற்றி மாவட்ட எஸ்.பியான லல்லேம் சன்காவிடம் கேட்ட போது, "இனிமேல்தானே முதல்வர் வந்து அதைத் திறந்து வைக்கப் போகிறார்!" என்று ஒரே போடாகப் போட்டார். மிஸோராமிலிருந்து வந்தவர் என்றாலும் ஜெ. கலாசாரத்தில்தான் எந்த அளவுக்கு ஊறித் திளைத்திருக்கிறார் அவர்!

## சிதம்பர ரகசியமா? திண்டுக்கல் ரகசியமா?

●● உண்மையில் ஜெ. எத்தனை கோடிக்கான நலத் திட்டங்களை திண்டுக் கல்லில் துவங்கி வைக்கப் போகிறார்? இம் மாதத்தின் முதல் வாரம் வரை அதிகாரிகளுக்கே ஒன்றும் தெரியவில்லை. ஆயினும் ஒவ்வோர் அதிகாரியும் மீட்டிங் மீட்டிங் என்று ஏகப்பட்ட பிஸியாகத்தான் இருந்தார்கள். உள்ளே என்னதான் மீட்டிங் போட்டார்களோ தெரியாது. வெளியே வரும் போது முதல்வருக்குக் கொடுக்கப் போகும் நினைவுப் பரிசுகள் பற்றி ரொம்பவும் அக்கறையாகப் பேசினார்கள்.



• நடேசன் : நகராட்சி கமிஷனர்

## முதல்வர் என்றாலே...

●● திண்டுக்கல் பெண்கள் நம்பியிருக்கும் ஒரே கல்லூரி, எம்.வி.எம். மகளிர் அரசுக் கலைக் கல்லூரி. அதுவும் மூடிக்கிடக்கிறது என்பது எவ்வளவு பெரிய விஷயம்? காரணம், அட்மிஷனில் முறைகேடுகள் செய்து விட்டார் கல்லூரி முதல்வர் என்கிறார்கள் ஒரு சாரார். முதல்வர் சரியாகத்தான் செய்திருக்கிறார்; அங்குள்ள சில ஆசிரியைகள்தாம் முதல்வருக்கு எதிராக மாணவிகளையும் பெற்றோர்களையும் தூண்டி விட்டுக் கொண்டு வேடிக்கை பார்க்கிறார்கள் என்று கூறுகிறார்கள் இன்னொரு சாரார். உண்மைதான் என்ன? முதல்வரையே சந்தித்துக் கேட்க எவ்வளவோ முயன்றும் முடியவில்லை. முதல்வர் என்றாலே சந்திக்க முடியாதவராகி விட வேண்டும் என்று கருதி விட்டார் போலிருக்கிறது!

— இளங்கோவன்

அட்டை வண்ணப்படங்கள், படங்கள் : யோகா


திருப்பள்ளி எழுச்சி பாடறோம்.. கண் முழிச்சிப் பாரு...
கருணை பொழிவாய்
தேர்தலுக்கு நீ கண் திறந்தாதானே விடிவு காலம்?
ம்... அடையாளா அட்டை ரெடியா...


வாழப்பாடி


அந்தம்மாவும் லட்சியம் பண்றதா தெரியலை! மத்திய அரசும் கண்டுக்கல... பென்சில் தேஞ்சி போனதுதான் மிச்சம்...




நான் போட்டிருக்கிற பனியன்தான் இப்போதைய ஃபேஷன்... நீங்களும் இதே மாதிரி போட்டுக்கணும்...



கல்கி



1994
செப்டம்பர் 25
பவ
புரட்டாசி 9
மலர் : 53
இதழ் : 8

தமிழ்த்திரு நாடு
தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.

# சிங்கப்பூர் தாழ்வாரத்தில் குப்பை சேருமா?

சில காலம் முன் பத்திரிகையாளர் சிலர் ஒரு விமானப் போக்கு வரத்து நிறுவனத்தின் முதல் கோலாலம்பூர் பயணத்தில் அழைத்துச் செல்லப்பட்டனர். அங்கிருந்து சிங்கப்பூர் சென்று வரவும் அவர்களுக்கு வசதி செய்து தரப்பட்டது. சிங்கப்பூரை நெருங்கும் போது வழிகாட்டியாக உடன் வந்தவர் ஒவ்வொருவரிடமாகப் போய் கையேந்தி நின்றார். எதற்குத் தெரியுமா? "சூயிங் கம் இருந்தால் தயவு செய்து கொடுத்து விடுங்கள்" என்று கெஞ்சினார்! காரணம், நமது பத்திரிகையாளர்கள் மறந்துபோய் இந்தியா ஞாபகத்தில், மென்று தீராத சூயிங் கம்மைச் சாலையில் துப்பி விடுவார்களோ என்ற அச்சம்தான்! அப்படி எதாவது நடந்தால் "ஆன் தி ஸ்பாட்" ஐந்நூறு டாலர் அபராதம் என்பதோடு அந்த விமான கம்பெனிக்கும் சிங்கப்பூர் அரசிடம் அவப் பெயர் ஏற்படும்! ஒரு சாக்கலேட் காகிதத்தைக் கசக்கி பிளாட்ஃபாரத்தில் போட்டாலும் போச்சு. உடனே தண்டனை!

தமிழக அரசு இங்கு சிங்கப்பூர் தாழ்வாரம் உருவாக்கத் தீவிர முயற்சி மேற்கொண்டிருப்பதாகத் தெரிய வருகிறது. இதற்காக ஆயிரக் கணக்கான ஏக்கர் நிலமும் ரூ.407 கோடி மூலதனமும் தர ஜெ. அரசு தயாராக உள்ளது. ஸ்பிக் நிறுவனமும் பாலாஜி இன்டஸ்ட்ரீஸும் இதில் ஈடுபடுமாம். சிங்கப்பூர் தொழிலதிபர்களை வளைத்துப் போடத் திட்டமாம். நல்லது, சிங்கப்பூர் செல்வந்தர்கள் வரட்டும்; தொழில் நுணுக்கம் தரட்டும்; தமிழகத்தின் வளம் பெருகட்டும்; வரவேற்போம். ஆனால் சிங்கப்பூர் தாழ்வாரத்தில் குப்பையும் கூளமும் சேராமல் நாம்தான் பார்த்துக் கொள்ள வேண்டும். அவர்களுக்குக் கட்டோடு பிடிக்காது! காகிதக் குப்பைக்கே அங்கே எத்தனை கெடுபிடி என்று பார்த்தோம். லஞ்ச அழுக்கும் ஊழல் குப்பையும் சேர்ந்தால்...?

சிங்கப்பூரின் முதலீடும் தொழில் நுணுக்கமும் இங்கு வந்ததால் மட்டும் நாம் உயர்ந்து விட மாட்டோம். நமது உழைப்பும் நமது நேர்மையும்தான் நம்மை உயர்த்தும். இதற்கு சிங்கப்பூரே ஓர் எடுத்துக் காட்டு! அங்கே இயற்கை வளம் என்பதாக ஏதும் கிடையாது. ஆனாலும் உலக வியாபாரத்தில் 2.5 சதத்தைச் சின்னஞ்சிறு நாடாகிய சிங்கப்பூர் நடத்துகிறது. காரணம், எந்தவிதக் கட்டுப்பாடுகளும் அற்ற சுதந்திரப் பொருளாதாரம். இந்தியாவோ எல்லையற்ற இயற்கை வளத்தையும் கணக்கற்ற அறிவாளிகளையும் (உலகில் மூன்றாவது இடம்) வைத்துக் கொண்டு உலகச் சந்தையில் 0.4 சதம் வியாபாரம்தான் செய்கிறது.

அயல் நாட்டினரின் ஏராள முதலீட்டை எல்லாத் துறைகளிலும் தங்கு தடையின்றி வரவேற்ற சிங்கப்பூரின் வளர்ச்சி ஆண்டு ஒன்றுக்கு எட்டு சதவீதம்! இதை எப்படி சாதித்தது? நீங்கள் அரசுக்கு ஒரு கடிதம் எழுதினால் இரண்டே வாரங்களில் உங்களுக்குப் பதில் வந்தாக வேண்டும்! அந்தப் பதிலையொட்டி நீங்கள் மறுகடிதம் எழுதுவது எனில் அதை மூன்று வாரங்களுக்குள் செய்தாக வேண்டும். அப்படி செய்யாத பட்சம் "FILE CLOSED" என்று முத்திரை குத்தி அரசு அதைக் குப்பைத் தொட்டியில் போட்டுவிடும்!

எந்த அரசு இலாகாவானாலும் சரி, ஐந்து ஆண்டுகளுக்கு பிறகு நடக்க வேண்டியதை இன்றே சிந்தித்து அதற்கான முன்னேற்பாடுகளைச் செய்தாக வேண்டும். இந்தியாவோ வேலை நிறுத்தம், கதவடைப்பு என்று நடந்த பிறகுதான் பிரச்னையையே கவனிக்க ஆரம்பிக்கிறது!

சிங்கப்பூரில் மந்திரிக்கு மாதம் ரூ.15 லட்சம் சம்பளம்! ஆனால் கார், வேலைக்காரர், டிரைவர், வீடு, பி.ஏ.போன்ற எந்த இலவச வசதியும் கிடையாது. இதனால் மந்திரிகள் பிறரை நம்பாமல் தாங்களே உழைக்கிறார்கள். எதிர்காலத்தைக் கருதி சிக்கனத்தைக் கடைப்பிடித்து சம்பளத்தில் கணிசமாகச் சேமிக்கிறார்கள்!

சிங்கப்பூர் மக்கள் தொகையில் தமிழர் ஐந்து சதவீதமே. ஆயினும் அங்கு டீ.வி., ரேடியோவில் தனி தமிழ் சானல் உண்டு.

இவ்வாறு சிங்கப்பூரிடமிருந்து நாம் கற்க வேண்டியது எவ்வளவோ இருக்க, முதலீட்டை மட்டும் வரவேற்றுப் பயனில்லை. அது சிங்கப்பூரின் லாபமாகவும் நமது நஷ்டமாகவும் முடியக் கூடும்!



**பேசிய டாக்டர் பதில் சொல்கிறார் :**

# பொடுகு அதிகமானால் தலைமுடி நிறமிழக்குமா?

அ. சண்முகசுந்தரம்,
சிட்லபாக்கம்.

● சிலருக்கு 20, 30 வயதிலேயே இளநரை வருகிறது. இதற்குக் காரணம் என்ன? நிவாரணம் உண்டா?

●● பெரும்பாலும் இது பரம்பரையாகத்தான் வருகிறது. எனக்குத் தெரிந்து இதற்கு உத்தரவாதமான நிவாரணம் கிடையாது.

● சோப்புக்குப் பதில், தாவரப் பொருட்களிலிருந்து தயாரிக்கப்படும் ஆரோக்கிய குளியல் பவுடர்கள் பற்றி இந்திய முறை மருத்துவர்களும், அழகு பராமரிப்பாளர்களும் பல யோசனைகளைக் கூறுகிறார்கள். தங்கள் கருத்து என்ன?

●● ஒரே வரியில் பதில் சொல்லுவதானால், விளம்பரப்படுத்தப்படும் அளவுக்கு அவை செயல்படுவதில்லை.

வி. கவிதா,
அரும்பாக்கம், சென்னை - 106.

● எனக்கு 19 வயது. ஷார்ட்-சைட். அதனால் கண்ணாடி அணிந்திருக்கிறேன். வெகு நாட்களாகவே எனக்கு முடி கொட்டிக் கொண்டிருக்கிறது. நான் சென்ற மாதத்தில் 20 நாட்கள் கண்களுக்காக காரட் ஜூஸ் குடித்து வந்தேன். விடமின் ஏ சத்து அதிகமானால் முடி கொட்டும் என்பதை உங்கள் கட்டுரையில் படித்த பின்பு அதை நிறுத்தி விட்டேன். நான் மீண்டும் அதைத் தொடருவதால் முடிக்கு ஏதாவது பாதிப்பு இருக்குமா?

●● காரட் ஜூஸ் சாப்பிட ஆரம்பிக்கும் முன்னரே உங்கள் முடி கொட்டியதாகத் தெரிகிறது. முடி கொட்டிப் போவதற்கு, ரத்த சோகை காரணமாக இருக்கலாம். இதற்கான டானிக்குகளைச் சாப்பிட்டால் முடி கொட்டுவது நிற்க வாய்ப்பு உண்டு. காரட் ஜூஸ் மிதமாகச் சாப்பிட வேண்டும். (காரட்டில் விடமின் ஏ இருக்கிறது.) அதிகமாகச் சாப்பிட்டால் அதற்கான பக்க விளைவு உண்டு. விடமின் ஏயும் டியும் அதிகம் உட்கொள்ளக் கூடாது. காரட் ஜூஸை வாரத்தில் ஒரு நாள் அல்லது இரண்டு நாள் பருகுங்கள், போதும்.

இராஜ. ஜி.ஆர். கிருஷ்ணன்,
கோவைப்புதூர்.

● என் முகத்தில் முகப்பரு வந்த போதெல்லாம் அதைக் கிள்ளிவிட்டு விடுவேன். தற்பொழுது என் முகத்தில் கறுப்பான குழிகள் நிறைய காணப்படுகின்றன. அதைப் போக்கி என் முகத்தைப் பழைய படி ஆக்க முடியுமா?

●● முகப் பருவைக் கிள்ளுவது தவறு என்று தெரிந்தே செய்யலாமா? தழும்புகளைப் போக்குவது கடினம். அப்படியும் உங்கள் மனத் திருப்திக்காக, சரும நோய் நிபுணரை அணுகிக் கலந்து ஆலோசிக்கவும்.

தக்கலை - லீலா இராம், தக்கலை.

● தலையில் பொடுகு, காளான்களைக் களைவதற்கு பெனிசிலின் போட்டுக் கொண்டால் குறையுமா? பொடுகு மிகுதியானால், முடி நிறத்தை இழந்து வெள்ளையாகுமா?

●● நரைக்கும் பொடுகுக்கும் சம்பந்தமில்லை. அதே போல் பெனிசிலினுக்கும் பொடுகுக்கும் சம்பந்தமில்லை. பொடுகு இருந்தால் Selsun என்னும் ஷாம்பு வாங்கி 15 நாளைக்கு ஒருமுறை தலைக்குப் போட்டு வந்தால், பொடுகு போய்விடும்.

- டாக்டர் பி.ஆர். சுப்பிரமணியம்



## ஒரு திருமணம் கச்சிதமாக முடிய மூன்று விஷயங்கள் தேவை





## ஒரு மணமகள்... ஒரு மணமகன்... மற்றும்...

# ...மார்கதர்சி!

இந்த இனிய நாளுக்காகத்தானே நீங்கள் காத்திருந்தீர்கள். உங்கள் மகள் தனக்கென்று ஓர் இல்லத்தை அமைத்துக் கொண்டு தன் குடும்பத்தின் மகிழ்ச்சிக்காக உங்கள் வீட்டிலிருந்து வெளியேறப்போகும் சுப தினம். உங்கள் நண்பர்கள் மாப்பிள்ளை தேட ஆரம்பித்திருக்கிறார்கள். "மாப்பிள்ளை தேர்வில் சமரசங்கள் கூடாது" என்று அவர்கள் விளையாட்டாகச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால், உங்கள் அடி மனத்தின் ஆழத்தில் ஒரு பயம் - நீங்கள் யாருடனும் பகிர்ந்து கொள்ள இயலாத அச்சம்- "என் மகளை மகிழ்ச்சியுடன் வழியனுப்ப முடியுமா?"- என்று ஐயப்படுகிறீர்கள்.

உங்கள் பயத்தைப் போக்க மார்கதர்சி ஒரு வழிகாட்ட முடியும். சிட் ஃபண்ட்கள் மூலமாக...

உங்கள் கவலைகளைப் போக்க மார்கதர்சி ஒரு வழி காட்ட முடியும் - சிட் ஃபண்டுகள் மூலமாக. உங்களுக்குத் தேவையான பெருந்தொகைகளைச் சுலபமாக அடையும் வழி. கடந்த முப்பத்திரண்டு ஆண்டுகளாக ஆந்திராவில் லட்சக்கணக்கானோர் மார்கதர்சியின் உதவி பெற்றுப் பயனடைந்துள்ளனர். இப்போது உங்கள் முறை!

உங்கள் செலவுகளுக்கேற்ப திட்டமிட்டுக் கொள்ள மார்கதர்சி சிட் ஃபண்ட்ஸ் உங்களுக்கு உதவுகிறது. ஒவ்வொரு மாதமும் ஒரு குறிப்பிட்ட தொகையைச் செலுத்தி வரலாம். உங்களுக்குத் தேவை ஏற்படும்போது, செலுத்திய தொகையைக் காட்டிலும் மிக அதிகமான தொகையைக் கேட்டுப் பெறலாம். 'ஏன், எதற்கு' என்று யாருக்கும் நீங்கள் விளக்கமளிக்க அவசியம் இருக்காது. நீங்கள் பெறக் கூடிய தொகையின் அளவை மற்றவர்கள் தீர்மானிக்கப் போவதுமில்லை. நீங்கள் சேரும் சிட் ஃபண்ட் திட்டத்தைப் பொறுத்து, பெறக் கூடிய தொகையின் அளவையும் அதைத் திரும்பச் செலுத்தும் தவணைகள் குறித்தும் நீங்களே முடிவெடுக்கலாம்.



மார்கதர்சி பற்றியும் அதன் சிட் ஃபண்ட் திட்டங்கள் பற்றியும் இன்னும் அதிகமாகத் தெரிந்து கொள்ள இன்றே எங்களை அணுகுங்கள்.

**மார்கதர்சி சிட் ஃபண்ட்**
**(மெட்ராஸ்) லிமிடெட்,**

ஏ 1 & 2, பார்சன் மானர் காம்ப்ளெக்ஸ்,
அண்ணா சாலை, சென்னை – 600 006,
தொலைபேசி : 8266002

வாழ்க்கையைப் போல் உங்கள் தேவைகளும் நிஜமானவை!

32 வருடங்களாக ஆந்திராவில் முதன்மை பெற்று 27 கிளைகளுடன் விளங்கும் கம்பெனியின் மதராஸ் துணை நிறுவனம்.

# Kalki Shopping Page

SIWA SIWA



SIWA SIWA

***Can a Clock do more than show the time?***

**Contact for Trade & Complementary Enquiries :**

*Authorised Distributors :*

## SRINIVASA AGENCY

**"Perry's view" D-39 Madlee Road, First Street, T.Nagar, Madras - 17. Phone : 4346454**

---

## B.M. SILK SAREES




**B.M. சில்க் சாரீஸ்**
**காஞ்சிபுரம்**
**பட்டுசேலை**
**தயாரிப்பாளர்:**

**5, வடக்கு மாட வீதி,**
**மைலாப்பூர்,**
**சென்னை - 600004.**
**Phone : 4940291**

எங்களின் மாதாந்திர சீட்டு திட்டத்தில் சேர்ந்து பயனடையுங்கள்.

குறிப்பு : அனைத்து பட்டு சேலைகளும் தறி விலைக்கே கிடைக்கும்.

All Credit Cards Accepted.

---




**ஜெட் - 45 கொசு விரட்டும் திரவம்!**

ஒரு பாட்டிலில் கிடைக்கும் இந்தத் திரவத்தை அதற்கான இயந்திரத்தில் பொருத்தி இயக்கினால், வாடையின்றி கொசுக்களை விரட்டிவிடும். தினமும் எட்டு மணி நேரம் விகிதம் 45 நாட்கள் நீடிக்கும். பிறகு இன்னொரு பாட்டில் வாங்கிப் பொருத்திக் கொள்ளலாம்.

வாடை இல்லை; தினமும் வில்லையை மாற்றும் வேலையும் இல்லை!

## SONIC ELECTROCHEM LTD INDORE

---

**KRISHNA ALSO AT GODOWN STREET**

## Sree Krishna

**CUT PIECE COLLECTION PVT. LTD.**

**Stockists For : SUITINGS, SHIRTINGS & SAREES & MATCHING BLOUSE BITS**

**39, GODOWN STREET,**
**(OPP. FLOWER BAZAAR POLICE STATION)**
**MADRAS - 600 001.**
**TEL: OFF : 589596**

**AVAILABLE IN WHOLESALE AND RETAIL**

# Kalki Shopping Page


# குண்டூசி

**48-வது ஆண்டு**
**தீபாவளி மலர்**
**1994**

சிந்திக்க வைக்கும் ஆன்மீகக் கட்டுரைகள், கவிதைகள், நல் உபதேசக் கதைகள், மற்றும் பல சிறப்பு அம்சங்களுடன் சுமார் 200 பக்கங்களுடன், ஆர்ட் பேப்பரில் நாலு வண்ணங்களில் சுவாமிகளின் படங்கள் முதலியவைகள் மன அமைதியும் மகிழ்ச்சியும் அளிக்கும் தெய்வீகப் புனித மலராய் வெளிவருகிறது.

**மலரின் விலை ரூ. 20/-**

*தபாலில் பெற விரும்புவோர் தபால் செலவு உள்பட ரூ. 22/- அனுப்பி அக்டோபர் 10-க்குள் பதிவு செய்து கொள்ளுமாறு வேண்டுகிறோம்.*

**விவரங்களுக்கு : நிர்வாகி**
**குண்டூசி, சென்னை - 14.**
**தொலைபேசி : 846434**



## நவசக்தி பெனிபிட் பண்ட் லிமிடெட்

No. 192, ராயப்பேட்டை நெடுஞ்சாலை,
மயிலாப்பூர், சென்னை - 600 004.
Regd. No. 18-26671 Ph : 4993809

**நாங்கள் தங்க நகைகளின் பேரில் 10 கிராமுக்கு ரூ. 3100 வரை கடன் வழங்குகிறோம்.**

**கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.**

- எங்களது புதிய திட்டங்கள்
- மாதாந்திர ஓய்வு ஊதிய திட்டம்
- அக்ஷய டெபாசிட் திட்டம்
- வருங்கால வசந்த திட்டம்

Transcations with members only

## நினைவாற்றல் பெருக வேண்டுமா?

பள்ளி, கல்லூரி மாணவ, மாணவிகளுக்கு ஞாபக சக்திக்கும் சுறுசுறுப்புக்கும் மூலிகைப் பொடிகளும் காந்த சிகிச்சையும்.

உயிருள்ள பின்விளைவற்ற இயற்கை மூலிகைப் பொடிகளான அருகம்புல், வல்லாரை, தூதுவளை, குப்பைமேனி, ஓரிதழ்தாமரை, அஸ்வகந்தி, நாயுருவி, தேத்தாங்கொட்டை, சீந்தில் தாமரை, சுக்கு, மிளகு, திப்பிலி, அதிமதுரம், சித்தரத்தை, நெல்லிக்கனி, இன்னும் பல மூலிகைகள் கலந்தது தினமும் காலை, மாலை வெறும் வயிற்றில் சாப்பிட்டு வர ஞாபக சக்தி அதிகரிப்பதுடன் நரம்பு மண்டலங்கள் ஆற்றலுடன் இயங்கச் செய்து சோம்பல் நீங்கி சுறுசுறுப்பும் பெறுவதுடன் சளி, இருமல், சோர்வு தொத்து வியாதிகள் வாராமலும் பாதுகாத்து எப்போதும் சுறுசுறுப்புடன் இருப்பார்.

இத்துடன் காந்தநீர் அருந்திவர உடலுக்கு தேவையான அனைத்து வைட்டமின்களும் கலந்து துருதுருவென்று சுறுசுறுப்பாக இருப்பார். காந்தநீர் உயர் சக்தி காந்தம் மூலம் அவரவர்களே தயாரித்துக் கொள்ளலாம். எங்களிடம் பலவகை காந்த கருவிகளுடன் பல நூறு மூலிகைப் பொடிகளும் கிடைக்கும்.

SAKTHI NATURE CURE RESEARCH AND SERVICE CENTRE
1, YMCA BUILDING,
ROYAPETTAH, MADRAS -600 014.
Ph: 831141

## ஒரிஜினல் வைரம் தரம் பார்த்தல்

நிறம், கட்டிங், காரட் நிறை, தெளிவுத்தன்மை (தோஷம்) (4C Factors) ஆகியவை குறைந்த சார்ஜில் பரிசோதித்து கூறப்படும்.

**We also conduct Government Recognised Natural Diamond Training Programme in cutting and polishing.**
**Next Course commences on 05/10/94.**

**S.P. NAIDU**
CORRESPONDENT
ROYAL DIAMOND TRAINING INSTITUTE
6 Second Cross Street,
Kasturibai Nagar,
Adyarm Madras - 20.
Phone : 413399, 411699 FAX : 416910

Govt. Recognition No. ISI/16929/93

# அட்டையும் இளமை; கட்டுரையும் இளமை!

◆ அட்டைப் படம் சூப்பர். பார்த்துக் கொண்டே இருந்தேன். 'கல்யாணத்துக்குப் பின்னால் காதலுக்கு டாட்டா?' கட்டுரை படித்தேன். நல்ல வாழ்க்கைக்கு பெருந்தன்மை, விட்டுக் கொடுப்பது, தவறுகளை மன்னிப்பது மூன்றும் தேவை என்று நயமாகச் சொன்னதற்குப் பாராட்டுக்கள். எந்த வயதிலும் காதல் செய்ய வேண்டும் என்பதைக் கட்டுரை உணர்த்தியது. அட்டையைப் போல இளமையான அழகிய கட்டுரை.

தூத்துக்குடி, சிவராமசுப்பிரமணியன்

◆ திருமணமானதிலிருந்து இறுதிக் காலம் வரை கணவன் - மனைவி இருவரும் எவ்வாறெல்லாம் நடந்து கொண்டால் காதல், பாசம், அன்பு போன்ற மேன்மையான உணர்வுகள் பாதுகாக்கப்படும் என்பதை மிக அழகாக, கோவையாகச் சொன்ன உங்களின் கட்டுரை, கல்கி படிக்கும் ஒவ்வொருவருக்கும் மிக்க பயனுள்ளதாக இருக்கும் என்பதில் சந்தேகமில்லை. அட்டைப்பட அழகுக்குத் தனிப் பாராட்டு.

மொரட்டுப் பாளையம், க.நா. இராஜேஸ்வரன்.



◆ '69 அரசியலும், அம்பேத்காரும்' தலையங்கம் அருமை. தேவையில்லாத பிரச்னைகளை எல்லாம் வம்புக்கிழுத்து, அதிலேயே ஆதாயம் தேடிப் பார்க்கும் நம் அரசியல்வாதிகளுக்கு அம்பேத்காரை எப்படி சார் நினைவுக்கு வரும்?

கும்பகோணம், புலவர் எஸ்.கே.மூர்த்தி.

◆ 'பதனீர்ப்பட்டி', ஈரோடு என். சாரதாப்பிரியன் எழுதிய சிறுகதையில் பானைகள் உடைந்து, பதனீர் ஒழுகி... பதினீர்ப்பட்டி மக்களின் அன்றாட வாழ்வின் அரசியல் குறுக்கீட்டை அழகாகப் படம் பிடித்து எழுதியுள்ளார்... நல்ல தேர்வு.

சேத்துப்பட்டு, ஆர்.பார்த்திபன்

◆ பரிசுக் கதைகள், மட்டுமல்ல; போட்டிக் கதைகளும் அற்புதமானவை என்பதற்கு பதனீர்ப்பட்டி சிறுகதை சான்று. நடையிலும் கதையின் முடிவிலும் என் நெஞ்சைத் தொட்டு விட்டார் அதன் ஆசிரியர்.

திருச்சி, சரஸ்வதிபஞ்சு.

◆ மூன்று பக்கங்களில் துணுக்குகளை வாரி வழங்கி எங்களைத் துணுக்குறச் செய்து விட்டீர்கள்!

விருத்தாசலம் -1, ஆர். ரமேஷ்பாபு

◆ இளைஞர் காங்கிரஸ் 'ஜெ'யை எதிர்த்துக் 'கிடுகிடு' போராட்டம் நடத்துவது இருக்கட்டும். முதலில் மக்களுக்குத் தன் மீது நம்பிக்கை வர, தன்னிடமுள்ள கோஷ்டிகளைச் சமாதானப்படுத்தி, ஒன்றிணைத்து, தனது ஒற்றுமையை நிரூபிக்கட்டும். இதுவே 'கிடுகிடு' போராட்டத்திற்கு வலுவான அடித்தளமாக அமையும்.

திருச்சி - 9, அருண்மொழிசரவணன்.

◆ "டாக்டர்கள் பற்றி எழுதிய ஜோக்கைக் கண்டு நாம் சிரிக்கிறோம். ஆனால் ஒரு நோயாளி இறக்கும் போது அவர்கள் எத்தனை வேதனை அடைகிறார்கள் என்பதைச் 'சில மரணங்கள், சில மனிதர்கள்' கட்டுரையைப் படித்த பின்தான் உணர்ந்தேன்.

திருச்சி-20, ஆர். உமா.

◆ "கனவு மெய்ப்படும்" முதல் வாரக் கட்டுரை, கீதைக்கு மகத்தான ஒரு தோற்றுவாய்! கட்டியம். இருபதுகளை ஈர்க்கும் உத்தி. சின்னச் சின்ன உதாரணங்கள். அற்புதம் போங்கள்! கீதோபதேசம் இளமையில் உண்ண வேண்டிய ஒப்பற்ற ஔடதம்!. இந்த கீதைத் தொடர்மூலம் இளமை நிச்சயம் பக்குவம் பெறும்.

சென்னை - 94, நவம்.

◆ 'துணுக்ஸ்' பகுதியில் "WIFE" என்பதற்கான விளக்கம் படித்தேன். "WIFE" என்பதற்கான இன்னொரு விளக்கமும் இருக்கிறது; W - Wonderful; I - Invited; F - for; E - Ever.

ஊரப்பாக்கம், சந்திரன்



## பண்டிகைக் காலம் வருகிறது...
## பல குடும்பங்களில்
## மகிழ்ச்சிக்குக் காரணம் —



# POFL நிறுவனத்தில் முதலீடு,
## நீங்களும் அதைப் பின்பற்றலாமே ?

இந்த பண்டிகைக் காலத்தில் உங்கள் உற்சாகம் பொங்கி வழியட்டும். அன்புக் குடும்பத்தினருக்கும் அருமை நண்பர்களுக்கும் அன்பளிப்புகள் தந்து மகிழுங்கள் குதூகலமாய்க் கொண்டாட முன்கூட்டியே திட்டமிடுங்கள் — இதற்கு வழி காட்டுகிறது POFL

பயனீர் ஓவர்ஸீஸ் ஃபைனான்ஸ் லிமிடெட் — பல்வேறு நிதித்துறை சேவைகளை உங்களுக்கு வழங்குகிறது. இது, இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க்கின் ஈக்விட்டி பங்கேற்புடன், பயனீர் ஏஷியா குரூப் மற்றும் ஸ்டாண்டார்ட் ஃபயர் ஒர்க்ஸ் நிறுவனங்களால் தொடங்கி நடத்தப்படுவதாகும்.



**உங்கள் பணத்தை முதலீடு செய்ய மிகமிகப் பாதுகாப்பான வழி — பயனீர் ஓவர்ஸீஸ் ஃபைனான்ஸ் லிமிடெட்.**



POFL எத்தனையோ முதலீட்டாளர்களில் நீங்களும் ஒருவர் என்ற எண்ணம் இங்கு கிடையாது. ஒவ்வொருவரையும் எங்கள் குடும்பத்தின் ஓர் உறுப்பினராகவே கருதுகிறோம். திருப்தி அடைந்த டெபாசிட்தாரர்கள் கொண்ட மிகப் பெரியதோர் அமைப்பில் நீங்களும் ஓர் அங்கம் என்பதை நீங்களே விரைவில் உணர்வீர்கள். மகிழ்ச்சி நிறைந்த இந்தக் குடும்பத்தில் சேருங்கள் — எந்தவிதக் கவலையும் இல்லாமல் பண்டிகையைக் குதூகலமாய்க் கொண்டாடுங்கள்.



## பயோனியர் ஓவர்ஸீஸ் ஃபைனான்ஸ் லிட்

**கிளை அலுவலகம் :** ஃப்ளாட் எண் 7 & 8, 2-வது மாடி,
அப்பாசாமி டவர்ஸ், 17 & 18, தியாகராயர் ரோடு, தி.நகர், சென்னை 600 017.
தொலைபேசி : 4345170, 4345173

**கார்ப்பரேட் அலுவலகம்:** மதுரை

**கிளைகள்:** ● மதுரை (வடக்கு வெளி) ● பெங்களூர் ● கோயம்புத்தூர் ● சேலம் ● திருச்சி ● சிவகாசி ● காரைக்குடி ● திருநெல்வேலி ● தூத்துக்குடி

**வளமையில் பங்குபெற வாய்ப்பு அளிக்கும் முன்னோடி**

ARTIO/1571



"ஜென்டில் மேன்" படம் பார்த்து என்னை ஜென்டில் மேனாக்கிய ரசிகப் பெருமக்களுக்கும், திரைப்பட விநியோகஸ்தர்களுக்கும், திரையரங்கு உரிமையாளர்களுக்கும், பத்திரிக்கை நண்பர்களுக்கும், மற்றும் அனைத்து தரப்பினருக்கும் என் நன்றி !

எங்களுடைய "காதலன்" படத்தையும் ஒரு மாபெரும் வெற்றிச் சித்திரமாக்க அனைத்து தரப்பினரையும் நன்றியுடன் கேட்டுக்கொள்கிறேன்.

-அன்புடன்
GENTLEMAN
**K.T. KUNJUMON**

**K.T. KUNJUMON**
PRESENTS
**ARS FILM INTERNATIONAL**

சத்யம் 70MM A/C
சாங்கம் 70MM A/C
கமலா A/C
பாரத்
4 காட்சிகள்
மற்றும் உலகெங்கிலும்



# கா·த·ல·ன்



TAKE IT EASY

**ஷங்கர்**

A.R. ரகுமான்

ஜீவா • லெனின் – V.T. விஜயன் • வாலி – வைரமுத்து • தோட்டா தரணி
பாலகுமாரன் • விக்ரம் தர்மா • சுந்தரம்–ராஜு Elegant









# மே மாதம்

அப்பாவின் கெடுபிடி, அராஜகம்; பெண், பறக்கத் துடிக்கும் சிட்டு. மே மாதத்தில் சிட்டு பறந்தும் விடுகிறது. பறந்தபின் நடப்பவையே படம்.

ஒவ்வொரு ஃபிரேமையும் பாலீஷ் போட்டு பளபளக்க விட்டிருக்கிறார்கள். முக்கால் படம் முடிந்தபின்தான் காதல் என்ற வஸ்துவே வருகிறது. அதுவரை வினீத், சோனாலி, கல்கத்தா, கிரேஸி மோகன், ரஹ்மான் மற்றும் பி.ஸி. ஸ்ரீராமின் கொட்டம் தான். அசத்தியிருக்கிறார்கள்.

காதல் வந்தபின் சோனாலி : அதுவரை சோகத்தைப் பார்சல் செய்திருந்த முகம்; பின்னர் வெடிச் சந்தோஷம். அப்புறம் பிணக்கில் தென்படும் நேசம்; கண்கள் பேசுகின்றன சார்!

'என் மேல் விழுந்த மழைத் துளியே' பாடல் இனிமை. மற்ற பாடல்கள் எல்லாம், டியூன்களின் புண்ணியத்தால் நிற்கின்றன. ஒவ்வொரு ஷாட்டின் செழுமைக்கும், ஆர்ட் டைரக்டரே காரணம். லைட்டிங்கில், ஸ்ரீராமுக்கு மெடல் கொடுக்கலாம்.

சுபம் போட வேண்டியது 1940, 50 களில் கட்டாயம். இப்போதும் அது தொடர வேண்டியதில்லை. அதற்காக் மூளைக் காய்ச்சல், ஜனகராஜ், ஹெலிகாப்டர் (கிளைமாக்ஸ்) பிலாவெல்லாம் பயங்கரம். டைரக்ஷனில் பயங்கர மணிரத்ன வாசனை. (கஸின் பிரதராமே?) பிரயத்தனப்பட்டு கொஞ்சம் ஒரிஜினாலிட்டி காட்டினால் பாலு பிரமாதமாக வந்து விடலாம். அட்வான்ஸ் வாழ்த்துக்கள்!

- துளசி

---



திருடன் 1 : திருடப் போயிருந்த இடத்துல, கத்தியைக் காட்டி எதுமே அந்த வீட்டுக்காரன் மயக்கம் போட்டுட்டான்... பிறகு, முகத்துல தண்ணி அடிச்சு மயக்கத்தைத் தெளிய வச்சேன்.

திருடன் 2 : எதுக்குண்ணே?

திருடன் 1 : பீரோ சாவி எங்கே இருக்குன்னு சொல்லாம மயக்கம் போட்டுட்டா என்ன பண்ண முடியும், சொல்லு?"

- சீர்காழி வி. ரேவதி



**இந்திரா பார்த்தசாரதி**

**13**

# வேதபுரத்து

'இந்திர பிரஸ்தம்' என்ற சொல்லினுடைய வேர் 'இந்திரா' வா 'இந்திரனா' என்பது ஆய்வுக்குரியது, சந்ததி ஆட்சியை மனத்தில் கொண்டால், 'இந்திரா' என்பதே பொருத்தமாகப்படுகிறது...

('இந்திர பிரஸ்தம் - ஓர் அமைப்பியல் பார்வை - டாக்டர் ஆர். பி. ஜெயின். பக். - 137)

அபூர்வாவின் இந்திர பிரஸ்த விஜயம் அந்நாட்டில் மிகவும் ஓர் அந்தரங்கமான ரகஸ்யமாகப் பாதுகாத்து வைக்கப்பட்டிருந்தது.

விமான நிலையத்தில் அவளை வரவேற்றவர் வயதான ஓர் மூத்த அதிகாரி. அவர் ஓய்வு பெற்று எட்டாண்டுகளுக்குப் பிறகு உத்தியோக ரீதியாக 'உயிர்ப்பிக்க'ப் பட்டிருந்தார் என்ற தகவலை நஞ்சுண்டன் அபூர்வாவுக்கு அவள் வேதபுரத்திலிருந்து புறப்படும் போதே சொல்லியிருந்தான்.

குள்ளமான உருவம். காதோரங்களில் நரைமயிர் கரை கட்டியிருந்தது. தலையின் பெரும் பகுதி, ஒளியில் குளித்து மூழ்கியது போல் பிரகாசமாய் பளபளத்தது. 'சஃபாரி சூட்' அணிந்திருந்தார்.

அவருடைய தாட்டியான சரீரத்துக்குப் பொருத்தமில்லாமல் குரல் கிறீச்சிட்டது.

அவள் நாட்டு மொழியைச் சுத்தமான இந்திரபிரஸ்த உச்சரிப்பில் அவர் பேசினார்.

"பயணம் சிரமமில்லாமல் இருந்ததா?"

"இருந்தது. இவள் என் காரியதரிசி, வனிதா."

அவர் சற்றுத் திடுக்கிட்டது போல் தெரிந்தது. காரியதரிசிகளை அவர் எதிர்பார்க்கவில்லை என்று அபூர்வாவுக்குத் தோன்றிற்று.

அவளையும் வரவேற்கும் ஆமோதிப்புப் புன்னகை.

"என் பேர் கிரிலால்... தலைவருக்கு அந்தரங்கச் செயலர்..."

அவள் தங்குவதற்கு ஓர் அரசாங்க வீடு ஏற்பாடு செய்திருந்தார்கள். வசதியான பங்களா. இந்த அளவுக்கு அவள் முக்கியமானவளா? அபூர்வாவுக்கு ஆச்சர்யமாக இருந்தது.

"ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள். டெலிஃபோன் செய்து விட்டுப் பிறகு வருகிறேன். உங்கள் உதவிக்கு இதோ இவனை ஏற்பாடு செய்திருக்கிறோம். இவன் பெயர் கிஷன் சந்த்."

கிஷன் சந்த் வணங்கினான்.

"இந்திர பிரஸ்த்த மொழி உங்களுக்குத் தெரியுமா?"

"தெரியும், ஓரளவுக்கு. சமாளித்துக் கொள்வேன்."

"சமையற்காரன் இருக்கிறான். உங்களுக்கு என்ன வேண்டுமோ அதை அவனிடம் சொல்லலாம்... எங்கள் தலைவருக்கு நீங்கள் வந்ததில் மிகவும் மகிழ்ச்சி, வணக்கம்...."

கிரிலால் போய் விட்டார்.

அவர் போன பிறகு அபூர்வா, வனிதாவிடம் சொன்னாள், "எனக்கு ஒண்ணும் புரியலே, கஜானாவை நான் கண்டு பிடிச்சுடுவேன்னு இவங்க நெஜமாகவே நம்பறாங்களா?"

வனிதா அவள் சொன்னதைக் காதில் வாங்கிக் கொண்டதாகத் தெரியவில்லை. மிகுந்த ஆச்சர்யத்துடன் வீட்டைச் சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"எவ்வளவு பெரிய வீடு!" என்றாள் வனிதா.

"தேநீர்?" என்றான் கிஷன் சந்த்.

"கொண்டு வரலாம்" என்றாள் வனிதா.

"நான் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லாமே வீட்டைச் சுற்றிப் பாத்துகிட்டிருக்கே?" என்றாள் அபூர்வா.

"முதல்லே 'டீ' குடிப்போம். குளிப்போம். அப்புறம் சாப்பாடு, ஓய்வு. பிரச்னையைப் பத்தி பிறகு யோசிக்கலாம்," என்றாள் வனிதா.

"அப்போ உனக்குக் கலியன் வீடு வேணாம், இந்த வீட்டைக் கொடுத்தாங்கன்னா, ஓ.கே. அப்படித்தானே!" என்று சிரித்துக் கொண்டே கேட்டாள் அபூர்வா.

"நீங்க நெனைச்சா இந்த வீட்டையும்



# வியாபாரிகள்

என்றாள் வனிதா.

அபூர்வா அவனை ஆச்சர்யத்துடன் கேட்டாள், "உனக்கு இவங்க பாஷை தெரியுமா? நல்லா பேசறயே?"

"என் மாஜி - தொழில்லே, நாலு பாஷை எங்களுக்குத் தெரிஞ்சுருக்கணும்" என்றாள் வனிதா.

"சரி... உன் மாஜி - தொழிலைப் பற்றிப் பேசிப் பேசி என்னை 'போர'டிக்காதே... நீ இப்போ என் செக்ரட்ரி... இந்திர பிரஸ்தத்திலே செக்ரட்ரிக்குத்தான் எல்லா அதிகாரமுமாம். அதனாலே..."

"நான் ஏற்கெனவே அந்த மாதிரி நடந்துக்க ஆரம்பிச்சாச்சு. இப்போ உங்க 'ப்ரோக்ராம்'லாம் யார் ஃபிக்ஸ் பண்ணாங்க, ஆறு மணிக்கு வெளியிலே போகப் போறோம்னு!"

எழுதி வாங்கிக்கலாம், அவ்வளவு சாமர்த்தியம் உங்களுக்கிருக்கிறது. ஆனா, எனக்கு வேணாம். நீங்க வாங்கிக்குங்க. நான் உங்க 'அஸிஸ்டென்ட்'...."

அப்பொழுது கிஷன் சந்த் தேநீர் கொண்டு வந்தான்.

தேநீரைக் கலந்து கொண்டே அவன் கேட்டான், "நீங்க எங்காவது போகணும்னா, கார் 'ரெடி' பண்ணச் சொல்றேன்.... போகணுமா 'மெம் சா(ஹ)ப்'?"

"இப்போ சாப்பிட்டுட்டு ஓய்வெடுக்கப் போறாங்க 'மெம் சா(ஹ)ப்'. சாயந்திரம் ஆறு மணிக்குக் கார் 'ரெடி'யா இருக்கட்டும்..."

என்று கூறிவிட்டுச் சிரித்தான் வனிதா.

கிஷன் சந்த் அவர்கள் இருவரும் வேத புரத்து மொழியில் பேசுவதைப் பார்த்துக் கொண்டு, சுவரோரமாகக் கையைக் கட்டிய வாறு நின்றான்.

"நீ போகலாம்" என்றான் வனிதா அவ னிடம்.



மாலை ஐந்தரை மணிக்கு டெலி ஃபோன் ஒலித்தது.

வனிதா எடுத்தான்.

"இங்கே வரப் போறீங்களா? நாங்க ஆறு மணிக்கு வெளியிலே போகலாம்னுருக் கோம். அப்படியா, ஒரு நிமிஷம் இருங்க!"

வனிதா அபூர்வாவிடம் சொன்னான் :

"கிரிலால் இங்கு வரப் போறாராம், முக்கியமான விஷயத்தைப் பேசணுமாம்."

"சரி, வரச் சொல்லு."

வனிதா டெலிஃபோனில் சொன்னான் :

"சரி வாங்க..."

அபூர்வா கையில் வைத்திருந்த புத்தகத் தைக் கீழே வைத்தான்.

"இந்திர பிரஸ்தங்கிறதுதான் இந்த நாட் டோட பெயராம். தொடர்ச்சியா ஒரே குடும்பம் சந்ததி சந்ததியா இந்த நாட்டை பல நூற்றாண்டுக் காலம் ஆட்சி செய்து வந்ததா தெரியுது, நடுவிலே திடீர்னு இந்தத் தொடர்பு போய் வேறொரு ஆட்சி ஏற் பட்டிருக்கு... இப்பொழுது அந்த பழைய சந்ததியைச் சேர்ந்தவங்க இப்போ இருக்கிற தலைவருக்குத் தொந்தரவு கொடுத்துக்கிட் டிருக்காங்க போலிருக்கு..."

"இதெல்லாம் அந்தப் புத்தகத்திலேருக் குதா?" என்றான் வனிதா.

"இல்லே... பல புஸ்தகங்களைப் படிச்சதி னாலே எனக்குத் தோணற யூகம்... அந்தப் பழைய சந்ததிக்காரங்களைப் பற்றி நினைச்சு நினைச்சே, இந்தத் தலைவருக்கு சிரிப்பைக் காணாம போக்கியிருக்கலாம்னு படுது...."

"இவரோட சிரிப்பை அவங்க திருடி யிருப்பாங்கன்னு நெனைக்கறீங்களா?"

"எல்லாத்தையும் கண்டு பிடிச்சாகணும்."

கிஷன் சந்த் உள்ளே வந்தான். "சா(ஹ)ப் வந்திருக்காரு."

"வரச் சொல்" என்றான் வனிதா.

கிரிலால் உள்ளே வந்தார்.

"ஓய்வு எடுத்துக் கொண்டீர்களா?" என்று கேட்டுக் கொண்டே வந்தார்.

"நன்றி... நல்ல ஓய்வு. உட்காருங்கள்!" என்றான் அபூர்வா.

கிரிலால் உட்காரவில்லை.

"ஒரு முக்கிய விஷயம்."

"என்ன?"

"உங்களுக்கு நாளைக்குத்தான் பாது காப்பு ஏற்பாடாகியிருக்கிறது. ஆகவே இன்று வெளியே போவது அவ்வளவு உசித மன்று."

"எதற்காகப் பாதுகாப்பு?"

"உங்களைப் பற்றி யாருக்கும் தெரிய நியாயமில்லை. இருந்தாலும், முன் ஜாக்கிர தையாக ஏற்பாடு. இன்று முதற் கொண்டே செய்திருக்க வேண்டும். ஆனால் இது பற்றித் தலைவர் அலுவலகத்துக்கும் உள்துறை அலுவலகத்துக்கும் சில கருத்து வேறுபாடு கள். தலைவர் ஒரு கமிட்டி போட்டு இந்தப் பிரச்னையை இன்று மதியந்தான் தீர்த்து வைத்தார்," என்றார் கிரிலால்.

கிரிலால் உட்கார்ந்தார்.

"எங்கள் தலைவர் உங்கள் தலைவருக்குத் தம் அன்பைத் தெரிவிக்கச் சொன்னார்," என்றான் அபூர்வா.

"நன்றி. தெரிவிக்கிறேன். நாளையிலிருந்து உங்கள் காரைத் தொடர்ந்து எங்களுடைய பாதுகாப்புக் கார் வந்து கொண்டேயிருக்கும். பாதுகாப்புக் கார் என்று அடையாளமிட்டு வராது. தினம் உங்களுக்குக் கொடுக்கப்படும் காரும், உங்களைத் தொடரும் காரும் மாறிக் கொண்டேயிருக்கும். எல்லாம் பாதுகாப்பு ஏற்பாடு."

"அவ்வளவு ஜாக்கிரதை தேவையா?"

"அப்படித்தான் படுகிறது. உங்கள் நாட் டில் வன்முறைப் பிரச்னை இந்த அளவுக்கு இருக்காது என்று நம்புகின்றேன்" என்றார் கிரிலால்.

"எங்க நாட்டிலே ஜனங்களைக் கண்டு பயப்பட வேணாம். போலீஸ்காரங்களைக் கண்டுதான் பயப்படணும்," என்றான் வனிதா.

கிரிலால் வனிதாவைப் பார்த்தார். புன் முறுவல்.

"எங்கள் மொழியில் நன்றாகப் பேசுகிறீர் கள்" என்றார்.

"நன்றி," என்றான் வனிதா புன்முறுவ லுடன்.

"நாளைக்குத் தலைவர் அலுவலகத்தி லிருந்து ஒருவர் வந்து உங்களைச் சந்திப்பார். காலை பத்து மணி உங்களுக்குச் சௌகர்யப்

"அந்த போலீஸ் இன்ஸ்பெக்டர் ரொம்ப நல்லவர்."
"எப்படிச் சொல்றீங்க?"
"'சத்யம்'-னு எழுதி யாராவது அதை அழிக்கச் சொன்னாக்கூட அழிக்க மாட்டாரா பார்த்துக்கோங்க!"
— சீர்காழி வி. ரேவதி

படுமென்று நினைக்கிறேன்."

"பத்தே முக்காலுக்கு வரச் சொல்லுங்கள்" என்றாள் வனிதா.

அபூர்வா அவளைப் புன்முறுவலுடன் பார்த்தாள்.

கிரிலால் வனிதாவைச் சில விநாடிகள், அடி மனத்திலிருந்த எரிச்சலுணர்வை முகத்தில் காட்டுவதை, மிகச் சிரமத்துடன் தவிர்த்து, அபூர்வாவைப் பார்த்துக் கேட்டார், "பத்தே முக்கால் சரியா!"

"சரி... இதற்கு முன்னால் எனக்குச் சில விவரங்கள் வேண்டும். என்னைப் பார்க்க வரும் நண்பருடன் பேசுவதற்கு உதவியாக இருக்கும்."

"என்ன விவரங்கள்?"

"உங்கள் தலைவருக்கு விரோதிகள் உண்டா?"

"இதை வரும் நண்பருடன் நீங்கள் விவாதிக்கலாம்."

"உங்களுடைய துப்பறியும் அலுவலகத்தின் உதவியை நாடாமல், என்னை அழைத்திருக்கிறீர்களே, ஏன்? என்னைப் பற்றி யார் சொன்னார்கள்?"

"உங்களைப் பற்றி எங்களுக்கு ஒன்றும் தெரியாது. உங்கள் தலைவர், எங்கள் தலைவருக்கு உதவி செய்யும் பொருட்டு மனமுவந்து உங்களை அனுப்பியிருக்கிறார். உங்கள் தலைவர் மீது எங்கள் தலைவருக்கு அசாத்திய நம்பிக்கை.

"உங்களுடைய துப்பறியும் அலுவலகத்துக்கு இது பற்றி எந்தவிதமான ஆட்சேபணையுமில்லை என்கிறீர்களா?"

அவர் சிறிது நேரம் பேசாமலிருந்தார்.

"சொல்லுங்கள்," என்றாள் அபூர்வா.

"எங்கள் துப்பறியும் அலுவலகத்தை வெளி நாட்டார் விலைக்கு வாங்கி விட்டதாகத் தெரிகிறது."

அபூர்வா திடுக்கிட்டாள். "உண்மையாகவா? இதுவும் கட்டுப்பாடுகளைத் தளர்த்தியதின் விளைவா?"

"இதை நீங்கள் நிதித் துறையினரோடு விவாதிக்க வேண்டும்."

"நிதித் துறையும் விற்கப்படவில்லை என்பது என்ன நிச்சயம்?"

"இதை நீங்கள் வணிகத் துறையினருடன் விவாதிக்க வேண்டும்."

கிரிலால் முகத்தில் எந்தவிதமான உணர்வுமின்றி இயந்திர கதியில் பேசினார்.

"பிரச்னை மிகவும் சிக்கலாக இருக்கும் போலிருக்கிறது" என்றாள் அபூர்வா.

"எனக்கொரு சந்தேகம்" என்றாள் வனிதா.

கிரிலால் அவள் பக்கம் திரும்பினார்.

"என்ன சந்தேகம்?" என்றாள் அபூர்வா.

"உங்க பாதுகாப்பை நாங்க எப்படி நம்பறது?"

"உங்கள் பாதுகாப்பு வெளி நாட்டு ஏஜென்ஸி ஒன்றிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. பயப்பட வேண்டாம்," என்றார் கிரிலால்.

"எந்த நாடு?"

அவர் சொன்னார்.

அபூர்வா பிறந்து வளர்ந்த நாடு. வனிதா அவளைப் பார்த்துப் புன்னகை செய்தாள்.

கிரிலால் எழுந்தார். "சரி, நாளைக்குப் பத்தரை மணிக்கு..."

வனிதா குறுக்கிட்டாள். "பத்தே முக்கால்."

"மன்னிக்கவும். பத்தே முக்காலுக்குத் தலைவர் அலுவலகத்திலிருந்து ஒருவர் வருவார். நான் வரட்டுமா?"

கிரிலால் போன பிறகு, அபூர்வாவிடம் வனிதா கூறினாள். "இந்தப் பிரச்னை நம்மாலே தீர்த்து வைக்கப்படும்னு நீ நெனைக்கறியா?"

"அதுதான் புரியலே..."

"நம்ம தலைவர் என்னை ஏன் இந்தச் சிக்கல்லே மாட்டி விட்டிருக்காருன்னு புரியலே. நாம கஜானாவைக் கண்டு பிடிச்சாலும் ஆபத்து, கண்டு பிடிக்காவிட்டாலும் ஆபத்து."

"பேசாமே திரும்பப் போயிடுவோமா?"

"எங்கே?"

"உங்க நாட்டுக்கு."

"இது கோழைத்தனம்."

வனிதா சிறிது நேரம் மௌனமாக இருந்து விட்டுப் பிறகு சொன்னாள். "எனக்கு ஒண்ணு தோணுது..."

"என்ன?"

"நம்ம வேதபுரத்து, வியாபாரிக பலே கைகாரங்க. அவங்க இந்த நாட்டுக் கஜானாவைத் திருடிக் கொண்டு போய் வேதபுரத்திலே வச்சிருக்கலாமில்லே? அப்படிச் சிந்திக்கறதிலே என்ன தப்பு?" என்றாள் வனிதா.

(தொடரும்)

"லட்ச ரூபாய் வர்ற வேலையை விட்டுடப் போறீங்களா?"

விலாசினி கேட்டாள். விலாசினியை சதீஷ் பார்த்தான்.

"என்ன செய்யறது? அன்பு மகள் வளர்ந்து கொண்டேயிருக்கிறாள். ப்ளஸ் டூ முடிக்கப் போகிறாள். குவைத்ல காலேஜ் கிடையாது."

"அது எனக்குத் தெரியும். நீங்க இங்க வேலை பாருங்க. நான் பிள்ளைகளை வச்சுக்கிட்டு மெட்ராஸ்ல இருக்கேன்" என்றாள் விலாசினி.

பதினைந்து வருடமாக குவைத் நாட்டில் குப்பை கொட்டி விட்டோம். சதீஷ் நினைத்துப் பார்த்தான். எலெக்ட்ரிசிடி போர்டு வேலையை விட்டிருக்கக் கூடாதோ என்று தோன்றியது. தன்னுடைய மூத்த மகள் ராஜிக்கு இரண்டு அல்லது மூன்று வயதிருக்கும். அடுத்தவள் ரம்யா விலாசினியின் வயிற்றிலிருந்தாள். போர்டு கொடுக்கும் சம்பளம் போதவில்லை. அப்பா ஆங்காங்கே கடன்கள் வைத்து விட்டுப் போயிருந்தார். தங்கை அவ்வப்போது கண்ணைக் கசக்கிக் கொண்டு வந்து நின்றாள்.

ஆபீஸில் கை நீட்டுவதற்குக் கூச்சமாய் இருந்தது. 'ஒவ்வொரு தனிமனிதனும் யோக்கியனாய் இருந்தால், உலகம் மாறி விடும்' என்று கல்லூரி வாழ்க்கையில் பேசிய தத்துவங்கள் நினைவிலிருந்து சங்கடப்படுத்தின. இரண்டு வருட காண்ட்ராக்டில் வேலை கிடைத்த போது, உடனே குவைத் புறப்பட்டான்.

அந்தக் கம்பெனியில் வேலை பார்த்துக் கொண்டே வேறு வேலை தேடினான். குவைத்தில் வேலை பார்க்கும் ஒவ்வொரு இந்தியனின் கனவான குவைத் ஆயில் கம்பெனி வேலை கிடைத்து, எண்பதினாயிரம் ரூபாய் சம்பளம் பேசப்பட்டு, 'காப்ரிஸ் கிளாசிக்' கார் கொடுக்கப்பட்டு, மூன்று பெட்ரூம் ஹவுஸ் வந்த போது, தன்னுடைய ஸ்டேட்டஸ் ஒரே இரவில் மாறிப் போனதை உணர்ந்தான். எலெக்ட்ரிசிடி போர்டிற்கு ஒரு ராஜினாமா கடிதத்தை எழுதி அனுப்பினான்.

பதினைந்து வருடங்கள் ஓடியது தெரியவில்லை. பேங்க் பேலன்ஸ் கூடியது. சென்னையில் ப்ளாட், போரூரில் இடம், ரிலையன்ஸ் முதல் புருக் பாண்ட் வரையிலான பங்குகள், ஹாலிடே ரிசார்ட்ஸ்... என்று பெருகியது.

# வேர்களைத் தேடி

அமெரிக்காவின் டிஸ்னி லேண்டும், எகிப்தின் பிரமிடும், லண்டனின் மேடம்



## பிருதிவிராஜ்

தாலாவும் பார்த்தாகி விட்டது. தன்னுடைய மகள் காலேஜ் படிப்பிற்கு வந்து விட்டாள். பிரமோஷன் இல்லாத வேலை பிடிக்கவில்லை. ஐம்பத்தி ஐந்து டிகிரி வெயில் பிடிக்க வில்லை. புழுதிப் புயல் பிடிக்கவில்லை. குப்பூஸ் பிடிக்கவில்லை.

சென்னையைத் தேடியது. தி.நகர் அகத்தியர் கோவில், மல்லிகைப் பூ மணம், நண்பர்களின் அரட்டை, சரவண பவன் சாம்பார் வடை, இலக்கிய வட்டாரங்களின் கூட்டங்கள், டீ சாப்பிட்டுக் கொண்டே பேசும் அரசியல் என்று பலவற்றை இழந்து விட்டோமோ என்று தோன்றியது.





## அருள்வாக்கு

ஒரே கடவுள்தான், ஒரே ஸத்வஸ்துதான் அத்தனை தேவதைகளாகவும் ஆகியிருக்கிறது என்று வேதத்தில் அழுத்தந்திருத்தமாகச் சொல்லியிருக்கிறது. ஒவ்வொரு தேவதையைப் பற்றிச் சொல்லும் போதும், அதுவே பரமாத்மா என்று லோகித்துச் சொல்லியிருப்பதாலும் வேதம் ஒரே - கடவுட் - கொள்கை (monotheism) உடையது தான் என்று தீர்மானமாகிறது. பல தேவதைகளைச் சொல்லியிருப்பதால், 'வேதம் பல கடவுள்கள் இருப்பதாகச் சொல்லியிருக்கிறது. Polytheism-ஐச் சொல்கிறது' என்று நினைப்பது பிசகு. ஒரே கடவுள் பல தேவதைகளாயிருப்பதைத் தான் அது சொல்கிறது. பிரபஞ்ச வியாபாரத்தை நடத்துவதற்காக ஒரே பரமாத்மாதான் இந்தத் தேவதைகள் என்ற அதிகாரிகளை உண்டாக்கியிருக்கிறார். இயற்கை என்று நாம் சொல்கிறதில் உஷ்ணம், மழை, காற்று, உணவு, ஸந்ததி, செல்வம், மனுஷ்யனின் உணர்ச்சிகள் முதலான பல விஷயங்களையும் நிர்வாகம் பண்ணுவதற்காக இந்த தேவதைகளை நியமித்திருக்கிறார். நம்மைப் படைத்தது போலவே தேவதைகளையும் படைத்திருக்கிறார். நம்மைத் தன்னிலிருந்தேதான் படைத்தார். அதாவது அவரேதான் நாமாக ஆனார். அதனால்தான் ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றே என்று அத்வைதத்தில் சொல்வது. இதே மாதிரி தேவர்களாகவும் அவரேதான் ஆகியிருக்கிறார். ஆனாலும் நாம் அத்வைதத்துக்கு நம்மைப் பக்குவப் படுத்திக் கொள்கிற வரையில், நம்மை வேறு வேறாக நினைத்துக் கர்மாக்களைப் பண்ணி நமக்குள் பரஸ்பர ஸஹாயம் செய்து கொள்வதால், தேவர்களையும் தனித்தனியாக நினைத்து, அவரவர்களுக்குரிய யக்ஞ ஆராதனையைப் பண்ணத்தான் வேண்டும் என்பது வேதம் போட்ட சட்டம்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

வேலையை ராஜினாமா செய்து விட்டு ஊருக்குப் போகலாம் என்று முடிவெடுத்தான். விலாசினி முதலில் வேண்டாம் என்றாள். இது அவளிடமுள்ள நல்ல குணம். பிடித்ததை நிகழ வைக்க முயற்சி செய்வது. முடியாவிட்டால் நிகழ்ந்ததைப் பிடித்த தாக்கிக் கொள்வது.

"அழகான மனைவி, அன்பான மனைவி அமைந்தாலே பேரின்பமே!" என்று பாடினான்.

விலாசினி சிரித்தாள். இந்த வருடம் கான்டிராக்டை நீடிக்க விரும்பவில்லை என்று சொன்னான். நிர்வாகம் கடைசி காசு வரை கணக்குப் பார்த்துக் கொடுத்தது. பதினைந்து வருட சேகரிப்பில் ஒன்றைக் கூட விடாமல், ஏர் இந்தியாவிற்கு எக்ஸ்ட்ரா பணம் கட்டி, விலாசினி தூக்கி வந்தாள்.

அடையாறில் சொந்த வீட்டில் வந்திறங்கினான். ஸ்வீட்ஸ் வாங்கி, எல்லோருக்கும் கொடுத்தான். சொந்தக்காரர்கள் வந்து பார்த்து விட்டுப் போனார்கள்.

"சார், வேலை போயிட்டேன்னு வருத்தப்படாதீங்க. என்னவோ ஆண்டவன் இந்த அளவுக்காவது கொடுத்தானேன்னு நினைக்கணும். கிடைச்ச அளவில் திருப்தி அடையணும். என்ன நான் சொல்றது..." என்று ஒருவர் சொல்லி வெறுப்பேற்றினார்.

அவர் சட்டையைப் பிடித்து "நான் மெரிட் போனஸ் வாங்கினவன் தெரியுமா?" என்று கேட்க வேண்டும் போலிருந்தது.

நண்பர்களைப் பார்க்கப் புறப்பட்டான். நாகராஜைத்தான் பார்க்க முடிந்தது. அட்டகாசமாய் வரவேற்றான்.

"நல்ல நாள்ல வந்திருக்க, பாயசம் சாப்பிடு."

"என்ன விஷயம்?"

"எனக்கு பிரமோஷன் கிடைச்சிருக்கு. டிவிஷனல் இன்ஜினியராயிட்டேன்."

"வெரிகுட். முத்துசாமி இப்ப எங்கேயிருக்கான்?"

"அவங்க பேங்க்ல அவனைத் திருநெல்வேலிக்கு ரீஜினல் மானேஜராகப் போட்டுட்டாங்க. பெரியாளாகி விட்டான்."

"சரி. சங்கரன் எங்கே?"

"அவனுக்கு நல்ல யோகம். அவங்க கம்பெனிக்கு நார்த் இண்டியாவில ஒரு புராஜெக்ட். புராஜெக்ட் மானேஜராகப் போய் விட்டான்."

"மதிவாணன் எங்கே?"

"அவனைப் பிடிக்க முடியுமா? அவங்க காலேஜ்ல வைஸ் பிரின்சிபாலாகி விட்டான்."

சட்டென்று தான் தனித்து விடப்பட்டதாக உணர்ந்தான். பதினைந்து வருடத்தில் எல்லோரும் ஏணியில் ஏறியிருக்கிறார்கள்.



**பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி**

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதரவர்களால், 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு, தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 130 மாணாக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஓர் நாள் உணவளிக்க, உணவு வகையினை அநுசரித்து சுமார், முறையே ரூ. 500/-, ரூ. 750/- அல்லது 1000/- ஆகிறது. இந்தத் தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ 5000/-, ரூ. 7500 அல்லது 10,000/- மூலதனம் ஏற்படுத்தியோ, அவ்வப்போது தொகை அனுப்பியோ, ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்குகொள்ளக் கோருகிறோம். நன்கொடை அனுப்ப வேண்டிய பெயரும் முகவரியும் :

**அத்வைத வித்யசார்யா மஹாராஜா ஸாஹேப்**
**ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி,**
**D-76 மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி, கும்பகோணம் - 612 001.**

**செக் (or) டிராப்ட் முதலியவைகளை A.V.M.S.G.D.P.S. ஸமிதி என்ற பெயருக்கு அனுப்பலாம்.**

******இந்த நன்கொடைக்கு 80-G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு******

## வேத வைதிக நூல்கள் (விலை தபால் செலவு உட்பட)

**I**

1. ரிக்வேத ச்ருங்கலா - நாகராக்ஷரம் - ரூ. 60/-
2. ரிக்வேத ஸம்ஹிதா நாகராக்ஷரம் 10 மண்டலங்கள் விலை ரூ. 165/-
3. ஸாமவேத ஸம்ஹிதா - கிரந்தாக்ஷரம் - 2 பாகங்கள் (முதல் பாகம் - ரூ. 185/-, இரண்டாம் பாகம் - ரூ. 210/-)
4. ஸாமவேத அஷ்டப்ராம்மணம் - நாகராக்ஷரம் - 3 பாகங்கள் (முதல் பாகம் - ரூ. 210/-, இரண்டாம் பாகம் - ரூ. 110/-, மூன்றாம் பாகம் - ரூ. 85/-)
5. ஸாமவேத பூர்வாபர ப்ரயோகம் - கிரந்தாக்ஷரம் - ரூ. 80/-
6. சாந்தி குஸுமாகரம் (2 பாகங்கள்) - ரூ. 170/-

**II கிரந்தாக்ஷரத்தில் காரிகையுடன் பிரம்மஸ்ரீ முத்துச்ரௌதிகளால் பதிப்பிக்கப்பட்ட கிரந்தங்களின் மறுபதிப்புகள்**

1. போதாயன பூர்வாபர ப்ரயோகம் - ரூ: 95/-
2. ஆபஸ்தம்ப பூர்வாபர ப்ரயோகம் - ரூ. 90/-
3. ஆபஸ்தம்ப ச்ராத்த ப்ரயோகம் - ரூ. 55/-
4. ஆச்வலாயன பூர்வாபர ப்ரயோகம் - ரூ. 85/-
5. ஆச்வலாயன ச்ராத்த ப்ரயோகம் - ரூ. 50/-
6. கல்ப சிந்தாமணி - ரூ. 55/-

**III நாகராக்ஷரம்**

1. மனாசேச்லோக - ராமமந்த்ராசே ச்லோக - ரூ. 25/- (மராத்தி மூலம் தமிழ் பதவுரை)
2. ஸ்ரீ ராதாகிருஷ்ண பூஜாவிதானம் - ரூ. 25/- (ஸம்ஸ்கிருத மூலம் - தமிழ் பதவுரை)
3. நிஜேனாதந்தம் - நைஷதகாவ்யத்தின் சுருக்கம் - ரூ. 25/- (ஸம்ஸ்கிருத மூலம் - ஆங்கில பதவுரை)
4. வேதபாட வழிமுறை (syllabus) ரிக், யஜுர், ஸாம - ரூ. 25/-
5. ராமோதந்தம் - நாகராக்ஷரம் - ரூ. 25/-
6. ஸௌபாக்ய யந்த்ரம் - ஆர்ட் பேப்பரில் - ரூ. 25/-

V.P.P. யில் அனுப்புவதில்லை. முழுத் தொகையையும் **M.O. (or) Draft** மூலம் கீழே குறிப்பிட்டுள்ள முகவரிக்கு அனுப்பவும். செக் மூலம் அனுப்ப வேண்டாம். "எமது நூல்கள் பற்றிய விவரமான லிஸ்ட் வாங்க விரும்புவோர் ரூ. 3/- தபால்தலை அனுப்பி பெற்றுக் கொள்ளலாம்."

**பிரஸிடெண்ட் - டிரஷரர் - A.V.M.S.G.D.P.S ஸமிதி, D-76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி, கும்பகோணம் - 612 001.**

நேரில் வாங்க விரும்புவோர் கண்டிப்பாக - ராஜா வேதகாவ்ய பாடசாலை, யாகசாலை தெரு, (சக்கரை படித்துறை அருகில்) கும்பகோணம் - 612 001 என்ற விலாசத்தில் பெற்றுக் கொள்ளவும்.




## வங்கிச் சிறை

திருமதி சிங்கானியா கல்கத்தாவிலுள்ள "யூக்கோ" வங்கியின் கிளைக்குச் சனியன்று வங்கி மூடிய ஒரு மணி முன்னதாகச் சென்று 'பாதுகாப்புப் பெட்டக அறைக்குள் போயிருக்கிறார். அவர் உள்ளே இருப்பதை கவனியாமலேயே 'வங்கி' மதியம் மூடப்பட்டு விட்டது!

ஞாயிறும், திங்களும் விடுமுறையான தால் வங்கி மூடப்பட்டே இருந்தது. செவ்வாய் காலை வங்கியைத் திறப்பதற்குத் தொழிலாளர்கள் சென்ற போது, 'பெட்டக அறையிலிருந்து ஏதோ குரல் கேட்கவே போலீஸாருக்குத் தகவல் கொடுக்கப்பட்டு பின்னர் மீட்கப்பட்டிருக்கிறார். அவர் உடல் நிலை பாதிக்கப்பட்டு மருத்துவமனைக்கு அனுப்பப்பட்டிருக்கிறார்.

ஆதாரம் : ஹிந்து
— புழுதிவாக்கம் சீனு

தனக்குச் சம்பளம் கூடியதே தவிர, பிரமோஷனில் போய் விட்டது. மேற்கத்திக்காரர்களே புத்திசாலிகள் என்ற உலகின் காம்ப்ளக்ஸ், அரபு உலகை அதிகமாக பாதித்து விட்டதன் விளைவு என்று தோன்றியது.

கொஞ்ச நாள் வீட்டிலிருந்தான். கடுமையாக போரடித்தது. வேலைக்கு மனுப் போட ஆரம்பித்தான். இன்டர்வியூவில் அவர்கள் சொன்ன சம்பளம், இவனுக்குச் சொந்தமான கட்டடத்தின் மாத வாடகைக்குச் சமமாக இருந்தது. வேலைக்குப் போவதில் பிரயோஜனமில்லை என்று நினைத்தான்.

"சார், உங்களை மாதிரி ஆளுங்க தொழில் ஆரம்பிக்கணும். அப்பத்தானே நாடு முன்னேறும்!" என்று யாரோ சொன்னார்கள்.

இந்தியாவின் முன்னேற்றத்திற்கு நாமும் உழைப்போமே என்று தோன்றியது. மடமடவென வேலைகளை ஆரம்பித்தான்.

பழவந்தாங்கல் அருகே ஓர் இடத்தைப் பிடித்தான். சின்ன பாக்டரி போட்டான். பாங்கிலிருந்து ஐந்து லட்சத்தை இறைத்தான். திறப்பு விழா நடத்தினான். எல்லாம் கலபமாக இருந்தது. ஆனால் நடத்துவது கலபமாக இல்லை. மார்க்கெட்டிங்கைப் பார்த்தால், புரொடக்ஷன் படுத்தது. புரொடக்ஷனைப் பார்த்தால், மார்க்கெட்டிங் படுத்தது. வாங்கும் போது விலையைக் குறைத்துப் பேசத் தெரியவில்லை. விற்கும் போது கூட்டிச் சொல்லத் தெரியவில்லை. சாமான்கள் திருட்டுப் போவதைத் தடுக்க முடியவில்லை.

"சார், நீங்க கொஞ்சம் சாமர்த்தியமாக இருக்கணும்!" என்று பக்கத்து வீட்டுக்காரர் கிண்டலாகச் சொன்னார்.

ஒருமுறை ஆயில் பைப் லைன் டிசைனில், தான் சொன்ன ஐடியாவிற்கு பிரிட்டிஷ் இன்ஜினியர் முதுகில் தட்டிக் கொடுத்துப் பாராட்டியது ஞாபகம் வந்தது. நாம் திறமையை விற்பவர்கள். நமக்குத் திறமையை வைத்துப் பணம் பண்ணத் தெரியும். ஆனால் பணத்தை வைத்துப் பணம் பண்ணத் தெரியாது. இது அவனுக்குப் புரிவதற்குள் ஐந்து லட்சம் காற்றில் போய், நாலு லட்சம் கடனாகியிருந்தது.

பாக்டரியை போன விலைக்குக் கொடுத்தான். ஒரு பிளாட்டை விற்றான். கடன்களை அடைத்தான். வீட்டின் மைய ஹாலில் உட்கார்ந்து விட்டத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். விலாசினி அருகே வந்து உட்கார்ந்தாள்.

"என்ன யோசிக்கிறீங்க?"

"வாழ்க்கையில பண்ணின தப்பையெல்லாம் யோசிச்சிக்கிட்டிருக்கேன்."

பிஸினஸில் எந்த இடத்திலெல்லாம் தான் புத்திசாலித்தனமாக நடந்து கொண்டிருக்க முடியும் என்று சொன்னான்.

"தப்பாக நினைக்காதீங்க. ஆனால் உங்களிடம் ஒரு பிரச்னையிருக்கு. காலத்தை ரிவர்ஸ்ல நகர்த்தணும்னு நினைப்பது. எல்லாம் ஒரு காலகட்டத்தில் கடந்து வரும் விஷயங்கள், அவ்வளவுதான். எட்டு வயதில் கோன் ஐஸ் சாப்பிட்ற சந்தோஷம் மாதிரி, பதினெட்டு வயதில் ஒரு பொண்ணு பின்னால் சுத்தற மாதிரி... எல்லாம் கடந்து போன சந்தோஷங்கள். பதினைந்து வருடங்களுக்கு முன்னால் நீங்க வாழ்ந்ததை மீண்டும் கொண்டு வர முடியாது. இந்த ஊரில் வேரை வெட்டி விட்டு, அடுத்த நாட்டில் கிளையை மட்டும் பரவ விட்டு விட்டோம். அதனால வேர்களைத் தேடுவதில் அர்த்தமில்லை. மற்றபடி பிஸினஸ் நஷ்டம் என்பது ஒரு சறுக்கல். ஏன்னா நாம அதற்கு லாயக்கில்லாதவர்கள்."

"இப்ப நான் என்னதான் பண்றது?"

"இந்த பேப்பரைப் பாருங்க..."

அதில் கத்தாரில் ஆயில் பைப்லைன் இன்ஜினியர் தேவை என்றிருந்தது!





பேச்சாளர் : முதலில் வீட்டு மனைப் பட்டாவை வாங்கிக் கொள்ளுங்கள். அரசாங்கம் நிலம் எங்கே இருக்கிற தென்று கண்டுபிடித்தவுடன் உங்க ளுக்குத் தெரியப்படுத்துவோம்...!

பேச்சாளர் : இப்போது நமது தலைவர் அவர்கள் இலவச வீட்டு மனைப்பட்டா வழங்குவார்கள். நமது கட்சியின் உறுப்பினர் கார்டு வைத்திருப்பவர்கள் மட்டும் வரி சையாய் வந்து அமைதியாய்ப் பெற்றுச் செல்லவும்...!

கருத்து : கரடிகுளம் ஜெயா பாரதிப்பிரியா
படம் : செல்லம்

# இலவச சிரிப்புப் பட்டா!



தொண்டர் : என்னண்ணே இது? இன்னும் இருபது பேர் காத்திருக்காங்க. ஐந்து வீட்டு மனைப்பட்டாதானே இருக்கு, என்ன பண்றது...?
தலைவர் : அதனாலென்ன... போய் இதையே பதி னைஞ்சு ஜெராக்ஸ் காப்பி எடுத்துட்டு வா, கதையை முடிப்போம்...!




"என்னங்க, வீடு வீடா இலவச வீட்டு மனைப்பட்டாவை மட்டும் கொடுத்துட்டுப் போறீங்க... இடம் எங்கன்னு சொல்லலையே...?"
"பொறுங்யா... நிலத்துக்கு அமெரிக்காவுல ஆர்டர் கொடுத் திருக்கோம்... பத்து லட்சம் ஏக்கர் கப்பல்ல வந்துட்டிருக்கு...!"



# மஹாலயம் (அல்லது மஹாளயம்)



பெரிய இருப்பிடம், கல்யாணாதி சுபங்களுக்கு இருப்பிடம் மஹான்களுக்கு இருப்பிடம் என பல பொருள்கள் உண்டு. அதாவது. மஹான்களான பித்ருக்கள் பூமியில் வந்து 16 நாட்கள் தங்கி, புத்ரன் முதலியவர்களுக்கு சுபத்தைச் செய்யும் காலம் என்று பொருள். ஸூர்யன் கன்யா ராசியில் புகுந்தபோது, ஆஷாடம் முதலான 5 ஆவது அபர பக்ஷத்தில் பித்ருக்கள் பூமிக்குச் செல்ல ஏவப்படுகின்றார்கள். அச்சமயம் நமது பெற்றோர், அவர்களது பெற்றோர்களுடன் கூடி நம்மை நாடி வருகின்றனர். அச்சமயம் மஹாளய அன்னச்ராத்தமாகச் செய்வது உத்தமம். இந்த 16 நாட்களில் செய்ய முடியாதவர் அன்ன ச்ராத்தமானால் அடுத்த பக்ஷத்திலும் செய்யலாம்.

தீபாவளி அமாவாஸ்யைவரை பித்ருக்கள் அன்ன ச்ராத்தத்தை எதிர்பார்க்கிறார்களாம். விதிப்படி ஹோமம் செய்து அன்னம் போட முடியாவிடில் அன்னத்திற்கு ப்ரதிநிதியாக வெள்ளி நாணயத்தை அளித்து (அதாவது ப்ராம்மணர்களை வரித்து, ஆஸனாதிகளையும் தக்ஷிணையும் அளித்து) தர்ப்பணம் செய்வதாம். அதே ஹிரண்ய ச்ராத்தம் எனப்படும். அங்ஙனம் பிரதி தினம் செய்ய முடியாதவர் பித்ரு, மாத்ரு திதி அல்லது மஹாபரணீ, வ்யதீபாதம், மத்யாஷ்டமீ முதலிய புண்யகாலத்தில் ஹிரண்யம் செய்வது பழக்கம். ச்ராத்த ப்ராம்மணர்களைப் போல் அல்லாமல், ஸாதாரண ஸமாராதனை போல் அன்று அன்னமிடுவது வழக்கம். அதுவும் தற்சமயம் பலவிடங்களில் நடப்பதில்லை. தக்ஷிணை அளித்து அனுப்புவதுடன் நிற்கின்றது. வீணான செலவுகளைக் குறைத்துக் கொண்டு மஹாளயத்தை அன்ன ச்ராத்தமாகச் செய்வதே உத்தமம். ஹிரண்யமாகவாவது செய்து அன்னமிட வேண்டும். 16 நாட்களிலும் தர்ப்பணத்தையேனும் விடாமல் செய்து ஒரு நாளாவது ஹிரண்ய ச்ராத்தம் செய்ய வேண்டும். அதனால் ஸகலவிதமான நன்மையும் பெறவேண்டும்.


<u>கல்யாண வைபவங்களுக்கு!</u> சீர்முறுக்கு, சீர் முள்ளுத் தேன்குழல், சீர் அதிரசம், தேன்குழல், அப்பம், திரட்டுப்பால், பருப்புத் தேங்காய் வகைகள் முதலியவை செய்து தரப்படும்.



# மஹாளயம் செய்வதால் உண்டாகும் பலன்



1. ப்ரதமையில் ச்ராத்தம் செய்தால் தனலாபமுண்டாகும்.
2. த்விதீயை ச்ராத்தம் ஸந்ததியைத் தரும்.
3. த்ரீதியா ச்ரார்த்தம் நல்ல வரன் அல்லது நல்ல மருமகளைத் தரும். அல்லது கோரிய வரத்தைத் தரும்.
4. சதுர்த்தி ச்ராத்தம் நமது பகைவர்களை அகற்றும்.
5. பஞ்சமீ ஸம்பத்தை உண்டாக்கும்.
6. ஷஷ்டி கர்த்தாவைப் பிறர் பூஜிக்கும்படிச் செய்யும்.
7. ஸப்தமீ பரலோகத்தில் ஒரு தேவ கோஷ்டிக்குத் தலைவனாகச் செய்யும்..
8. அஷ்டமீ உயர்ந்த புத்தியை அளிக்கும்.
9. நவமீ நல்ல மனைவியைத் தரும். துஷ்ட மனைவியை நல்லவளாகச் செய்யும். அடுத்த பிறவியிலும் நல்ல மனைவியைத் தரும்.
10. தசமீ நம் விருப்பத்தைப் பூர்த்தி செய்யும்.
11. ஏகாதசீ ஸகல வேத வித்யைகளையும் தரும்.
12. த்வாதசீ ஸ்வர்ணத்தைத் தரும்.
13. த்ரயோதசீ ஸந்ததி, மேதை, பசு, புஷ்டி, ஸம்ருத்தி நீண்ட ஆயுள் முதலியவைகளைத் தரும்.
14. வஸ்த்ரம் அல்லது அக்னி (தற்காலத்தில் தோன்றிய ரயில், மோட்டார் போன்ற விபத்து) இவைகளால் இறந்தவர்களுக்குச் சதுர்த்தசியில்தான் மஹாளய ச்ராத்தம்செய்ய வேண்டும். அதே அவர்களுக்கு இன்பத்தைத் தரும்.
15. அமாவாஸ்யை ச்ராத்தம் ஸகல இஷ்டங்களையுமளிக்கும்.
16. அடுத்த ப்ரதமை தர்ப்பணம் முன் செய்தவைகளில் உள்ள குறைகளை நீக்கிப் பூர்ணமாகச் செய்யும்.

ஆபஸ்தம்ப ஸூத்ர தர்ப்பண விளக்கம்.


இத்துடன் கிராண்ட் ஸ்வீட்டுகளை வாங்கி நல்லோர்க்கு விநியோகம் செய்யவும்.

தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

நெ.24, 2வது மெயின் ரோடு, காந்தி நகர், அடையாறு, சென்னை-20

போன் : 412557.

GOVIND

# 'கோலா'கலத் திருவிழா?!

...தா ஆட்சியின் போது
...பாவிலிருந்து
...யேற்றப்பட்ட
...கா–கோலா கம்பெனி
...பாது மீண்டும் தனது
...ளையைத்
...கியிருக்கிறது. நமது
...நர் குளிர்பானங்களுக்குச்
...லாக வந்திருக்கும் இந்த
...கோ–கோலா பிறந்து
...ந்த வரலாறு என்ன?

...லில் ஒரு சின்ன பயோ-டேட்டா. (பெப்சி ரசிகர்கள் ...ஜார்ஜ் ஃபெர்னாண்டஸ் ஒதுங்கிக் கொள்ளவும்)

• கோகோ-கோலா பிறந்த இடம்



பெயர் : கோகா– கோலா

வயது : 108

பிறந்த இடம் : அமெரிக்காவில், ஜார்ஜியா மாநிலம் அட்லான்ட்டாவில்

வசிப்பது : கிட்டத்தட்ட உலகம் முழுக்க (சீனா உட்பட!)

கண்டுபிடித்து முதலில் ருசி பார்த்தவர் : ஜான் ஸ்டித் பெம்பர்டன்



• பெம்பர்டன்



• ராபின்சன்

பெம்பர்டன் ஒரு ஃபார்மஸிஸ்ட். திடீரென்று ஒரு நாள், தம் வீட்டுக் கொல்லையில் சில தழைகளைப் போட்டுக் காய்ச்சி அதன் டிகாக்ஷனை ஒரு கெட்டிலில் விட்டு வைத்துக் குடித்துப் பார்த்தார். ருசியாக இருந்தது. தெரு முனையில் இருந்த ஜாக்கப் ஃபார்மஸியில் கொண்டு போய் வைத்துக் கொண்டு, போகிற-வருகிறவர்களிடம் எல்லாம் "சாம்பிள் பாருங்கள்!" என்று குடித்துப் பார்க்கச் சொன்னார்.

"ஆகா, பிரமாதம்!" என்று எல்லாருமே சொன்னார்கள். ஒரு தம்ளர் 5 சென்ட் என்று விற்பனை செய்தார் பெம்பர்டன். இந்தச் சாறுடன் சோடா வாட்டர் தயாரிக்கப் பயன்படும் கார்பனேடட் நீரைக் கலந்து குடித்த போது, சுவை அலாதியாய் இருந்தது. 'ருசியானது. புத்துணர்ச்சி அளிப்பது' என்கிற பாராட்டும் சேர்ந்து கொண்டது.

பெம்பர்டன் கண்டுபிடித்த பானத்துக்கு அவர் ஆப்த நண்பர் ராபின்சன் ஒரு பெயர் சூட்டினார்.

கோகா–கோலா.

பெயரைச் சூட்டியதோடு நிற்காமல், அந்த எழுத்துக்கள் எப்படி இருக்க வேண்டும் என்று எழுதியே காண்பித்தார் ராபின்சன். அதுதான் இன்றைக்கு உலகம் முழுக்கத் தெரிந்த டிரேட் மார்க் ஆகி விட்டது.

உள்ளூர் 'அட்லாண்டா ஜர்னல்'லில் முதல் விளம்பரம் வெளியாயிற்று. ஆரம்பத்தில் ஒரு நாளைக்கு 9 தம்ளர்கள் அளவுக்குத்தான் விற்பனை. (அப்போது பெம்பர்டனுக்குத் தெரியாது - இது உலகையே ஒரு கலக்குக் கலக்கப் போகிறது என்று!)

1888ல், இறப்பதற்கு முன், பல பாகஸ்தர்களுக்குத் தம் கண்டுபிடிப்பின் உரிமையைக் கொஞ்சம் கொஞ்சமாக வழங்கினார். பிறகு அட்லான்டாவிலேயே காண்ட்லர் என்பவரிடம் மீதி பங்குகளை விற்றார். காண்ட்லர் லேசுப்பட்ட ஆளில்லை. வெளியே இருந்த பங்குகளை எல்லாம் வாங்கி வளைத்துப் போட்டார். காண்ட்லர் கைக்கு முழு கண்ட்ரோலும் வந்து விட்டது!

நான்கு வருடங்களுள் கோகா-கோலா பத்து மடங்கு விற்பனை ஆகத் தொடங்கியது. அமெரிக்கா முழுவதும் தொழிலகங்கள் தொடங்கப்பட்டன.

1895-ல் காண்ட்லர் பெருமையுடன், "இப்போது அமெரிக்காவின் ஒவ்வொரு மாநிலத்திலும் கோகா-கோலா கிடைக்கிறது!" என்று அறிவித்தார்.

கண்ணாடி தம்ளர்களில் விற்கப்பட்டு வந்த கோக் விரைவில் புட்டிக்குள் புகுந்து கொண்டது. நிறைய குளிர்பானங்கள் மார்க்கெட்டுக்கு வரவே, கோகா - கோலாவுக்கு என்று வித்தியாசமாக ஒரு பாட்டில் தேவைப்பட்டது. பாட்டிலின் இடுப்புப் பகுதி சிறிதே குறுகி, விரல்கள் வசமாகப் பிடிக்கும் வகையில் ஒரு பாட்டிலை உருவாக்கிக் கொடுத்தது ரூட் கிளாஸ் கம்பெனி. இது 1916ல். இதற்கு அமெரிக்க பேடன்ட் கிடைத்தது எப்போது தெரியுமோ? 1977ல்!

கோகா கோலா தயாரிப்பு உரிமை சில பல கைகள் மாறினாலும் அதன் விற்பனை உயர்ந்து கொண்டே வந்தது. விளம்பரங்கள் ஏராளமாகச் செய்யப்பட்டன. மருந்துக் கடை வாசல்களில் எல்லாம் பெரிய கட்-அவுட்டுகள். (ஜெ-க்கு முன்னோடி கோகா-கோலாதான்!) உலகெங்கும் அதன் பாட்டிலின் சாம்ராஜ்யங்கள் பெருகின.

இரண்டாவது உலகப் போரின் போது, கோகா-கோலாக்காரர்கள் அமெரிக்கப் படை வீரர்களுக்கு ஒரு சலுகை அளித்தார்கள். ராணுவ உடை அணிந்த வீரர்கள், அவர்கள் எங்கே இருந்தாலும் 5 செண்ட் விலையில் கோகா-கோலா குடிக்கலாம். (ஐந்து பிலியன் பாட்டில்கள் இப்படி விற்பனை ஆயின!)

1988ல், ஓர் அமெரிக்க நிறுவனம் எடுத்த சர்வேயில், கோகா-கோலாதான் உலகிலேயே அதிகமாக அறியப்பட்ட, விரும்பப்பட்ட குளிர்பானம் என்ற தகவல் வெளியானது.

இந்தியாவில் 16 வருடங்களுக்குப் பிறகு, (ஜார்ஜ் ஃபெர்னாண்டஸையும் மீறி) கோகா-கோலா இப்போது நுழைந்து விட்டது. காரணம் மன்மோகன் சிங்கின் தாராளமயமாக்கல்தான். தடாலடியாக நுழைந்து, மற்ற பிராண்டுகளை மிரள வைத்துக் கொண்டிருக்கும் கோகா-கோலாவுக்கு இங்கே இடம் கொடுக்க வேண்டுமா என்று கேட்கப்படுகிறது. ஒரு குளிர்பானத் தயாரிப்புக்குப் பன்னாட்டு நிறுவனம் ஏன்?

"டேஸ்ட் சார், டேஸ்ட்! உலகம் முழுக்க இதுதான் உசத்தியானது என்று ஒப்புக் கொள்ளும் போது, நம் நாடு மட்டும் ஏன் இரண்டாம்பட்சத்தை ஏற்க வேண்டும்? எத்தனையோ விஷயங்களில் அவர்களைப் பார்த்துப் பிரமித்துப் போய் நிற்கிறோம். அவர்களுடைய வசதியும், வாழ்க்கையும் இங்கேயும் வராதா என்று ஏங்குகிறோம். கோகா-கோலா ஒரு சின்ன ஆறுதல்.

## அமெரிக்காவில் இருந்து தஞ்சைக்கு வந்த ருத்ராட்சமாலை!

தஞ்சை மாவட்டம் திருப்பாலத்துறையில் வசித்து வரும் எழுத்தாளர் கலாநிதி. இவருக்குப் பேனா நண்பர் அமெரிக்காவைச் சேர்ந்த ஹானலுலுவில் வசிக்கும் "ரெனால்டு டி ப்பூ. வயது 29. இவர் 180 அடி நீளமுள்ள ரூ.7 ஆயிரம் மதிப்புள்ள ருத்ராட்சமாலை ஒன்றை கலாநிதிக்கு அனுப்பியிருக்கிறார். தஞ்சைப் பெரிய கோயிலுக்கோ, அல்லது வேறு சிவாலயத்துக்கோ அன்பளிப்பாக வழங்குமாறு கேட்டுக் கொண்டுள்ளார். இதனை தினசரி நூற்றுக்கு மேற்பட்ட பக்தர்கள் வந்து தரிசித்துச் செல்கின்றனர்!

தகவல்: டி.எம்.முருகானந்தம்.

அவ்வளவுதான்!'' என்கிறார்கள் இதன் ரசிகர்கள்.

"நான் அறிந்தவரை இதில் BVO கலப்பு இல்லை. அதனால் உடலுக்கு ஊறு ஏதும் விளைவிக்காது. அதிலும் மிஞ்சி மிஞ்சிப் போனால் ஒரு நாளைக்கு இரண்டு கோகா- கோலா குடிப்பாரா ஒருவர்? அதனால் உடல்நலத்தைப் பொறுத்தவரை 'கோக்' ஒரு தடை அல்ல!'' என்கிறார் பிரபல மருத்துவர் ஒருவர். ஆயினும் 'ஆஸ்பரின்' போன்ற சில மாத்திரைகளைக் கோகா கோலாவுடன் கலந்து அருந்தும் போது ஒருவித போதை தருவதால்தான் இளைஞர்கள் - விரும்புகிறார்கள் என்றும் சொல்கிறார்கள்.

எப்படியிருந்தாலும் 'இந்தியத் தண்ணீரை எடுத்து, இந்தியர்களிடமே விற்று, அமெரிக்கா பணத்தை எடுத்துக் கொண்டு போகிறது. இதுதான் கோகோ-கோலா' என்று ஜார்ஜ் பெர்னாண்டஸ் கூறுவதிலும் நியாயமிருக்கிறது!

காரணம், கோகோ-கோலாவும் பெப்சியும் இந்தியாவுக்குள் காலடி எடுத்து வைத்ததால், முற்றிலும் இந்தியாவிலேயே தயாரிக்கப் பட்ட குளிர்பானங்களின் விற்பனை கணிசமான அளவுக்குப் பாதிக்க ஆரம்பித்திருக்கிறது. அதோடு, பல கோடிக்கணக்கான ரூபாய்களைச் செலவழித்து, அந்த அந்நிய கம்பெனிகள் இரண்டும் செய்து கொண்டிருக்கும் விளம்பரங்களைப் பார்த்தால், இந்தியாவில் கோகோ-கோலா அல்லது பெப்சிகோலா மட்டும்தான் இருப்பது போன்ற பிரமையை ஏற்படுத்தி, மற்ற இந்திய குளிர்பானங்களையெல்லாம் மறக்கடிச் செய்கிற முயற்சியாகத்தான் தெரிகிறது.

இல்லையென்றால் ஒரு சராசரி இந்தியன் ஆண்டொன்றுக்கு மூன்று குளிர் பானங்கள் மட்டுமே குடிக்கிறான் என்கிற நிலையில், (அமெரிக்காவில் நானூறு!) இந்த அந்நியக் கம்பெனிகள் எந்த நம்பிக்கையில் இங்கே வந்துள்ளன? கூடிய விரைவிலேயே ஒரு சராசரி இந்தியன், பாரம்பரியமாகக் குடித்துக் கொண்டிருக்கும் மோர், பதனீர், இளநீர், எலுமிச்சை ஜூஸ் போன்ற ஆரோக்கியமான - விலை மலிவான - பானங்களையெல்லாம் கூட பின்னுக்குத் தள்ளி விடலாம் என்கிற நம்பிக்கையில்தான்!

உலகின் மிகப் பெரிய நுகர்வோர் சந்தைகளுள் ஒன்றான இந்தியாவுக்குள் நுழைய அயல் நாட்டு நிறுவனங்கள் துடித்துக் கொண்டிருக்கின்றன. நாம் விழிப்புடன் இல்லாவிட்டால் அவை நம்மையே விழுங்கிவிடும்!

- எஸ்.வி.என்.





LET YOUR CHILD FIND OUT IN THE OCTOBER ISSUE OF

**GOKULAM**

*The monthly magazine for children*

**A THRILLING NEW SERIAL BEGINS!**

BUY YOUR CHILD A COPY TODAY!

96 pages for just Rs. 3/-

GOKULAM, Ekkaduthangal, Madras - 600 097.

# மஞ்சள் கொடி

ஜோதிர்லதா கிரிஜா

நாட்டு விடுதலைப் போராட்டத்தில் ஆணுக்கு நிகராய்ப் பெண்ணும் பங்கேற்க வேண்டியதன் அவசியம் பற்றிப் பேசினாள் அஞ்சனா. மிதவாதம் இன்னும் ஐந்நூறு ஆண்டுகள் ஆனபிறகும் சுதந்திரம் பெற்றுத் தராது என்று கூறி, மிதவாதிகளைக் கடுமையாகச் சாடினாள். அதி தீவிரவாதிகள், கொல்லுவது என்பதை ஒரு கொள்கையாகக் கொள்ளவில்லை என்றும், தற்காப்பு, கட்டாயம், வேறுவழியற்ற நிலை ஆகியவற்றின் பொருட்டு மட்டுமே கொலை செய்வதாகவும், எனவே அவர்கள் பயங்கரவாதிகள் எனும் பெயரால் அழைக்கப்படலாகாது என்றும் பேசினாள். பேச்சின் இந்தக் கட்டத்தின் போது அவளுக்கு நரேந்திரநாத் பானர்ஜியின் ஞாபகம் மிக அதிகமாக வந்தது.

அந்தச் சிறிய கூட்டத்தில் ஐந்து பெண்கள் இருந்தார்கள். "நாடுதழுவிய இயக்கம் எதுவாக இருந்தாலும் ஆண்கள், பெண்கள் ஆகிய இருபாலரும் பங்கு பெற்றாலன்றி, அது வெற்றி பெறாது. என்று பெண் ஆணை விடத் தாழ்ந்தவள் என்ற எண்ணத்தை ஆண்களும் பெண்களும் கை விடுகிறார்களோ அன்று தான் நாடு 'உண்மையான சுதந்திரம் பெற்றதாக ஆகும். உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். 1905-ஆம் வருஷம் காசியில் நடந்த அகில இந்தியக் காங்கிரஸ் மகாநாட்டுக்கு நம் சுப்பிரமணியபாரதியார் சென்றிருந்த போது, சுவாமி விவேகானந்தரின் சிஷ்யையான சிஸ்டர் நிவேதிதாவைச் சந்தித்து உரையாடினார். மகாநாடு முடிந்து திரும்பும் போது வழியில் கல்கத்தாவில் இவர்களது சந்திப்பு நிகழ்ந்தது. சிஸ்டர் நிவேதிதா, 'உங்களுக்குக் கல்யாணம் ஆகி விட்டதா?' என்று நம் பாரதியாரை விசாரித்தார். 'ஆகி விட்டது. எனக்கு ஒரு பெண் குழந்தை கூட உண்டு' என்றார் பாரதியார். 'அப்படியானால் உங்கள் மனைவியைக் காங்கிரஸ் மகாநாட்டுக்கு நீங்கள் ஏன் அழைத்து வரவில்லை?' என்று நிவேதிதா அம்மையார் வினவ, நம் பாரதியார், 'பொது இடங்களுக்கெல்லாம் நம் ஆண்கள் தங்கள் மனைவிமாரை அழைத்துச் செல்லுவதில்லையே' என்றார். 'என்னது? அழைத்துச் செல்லுவதில்லையா? ரொம்ப அழகாய் இருக்கிறது உங்கள் பேச்சு. சுதந்தரத்தைப் பற்றி 'நீங்கள்' பேசுகிறீர்களா? நல்ல வேடிக்கை. மக்களின் ஒரு பாதி சுதந்திரம் மறுக்கப்படும் போது மறுபாதிக்கு அது எவ்வாறு கிடைக்கும்? நீங்கள் வேறு, உங்கள் மனைவி வேறு என்று ஒருபோதும் எண்ணாதீர்கள். அவளை உங்கள் வலக்கையாகக் கருதி, உங்கள் முழு மனத்தாலும் அவளை நேசியுங்கள். பாரதமாதா அடிமைச் சங்கிலியில் கட்டுண்டிருக்கிறாள். அவள் குழந்தைகள் எல்லாருமே துணிந்து போராடித்தான் அவளை விடுதலை பெறச் செய்ய வேண்டும்' என்றார். இதற்குப் பிறகுதான் நம் பாரதியார் பெண் விடுதலையில் அதிக நாட்டம் கொண்டார் என்று சொல்லுகிறார்கள். ஆக, இது போன்ற பொதுப் போராட்டங்களில் பெண்களும் - படித்த பெண்களாவது - கண்டிப்பாக ஈடுபட வேண்டும். தேச விடுதலைப் போராட்டத்தில் கலந்து கொள்ளும் பெண்களின் எண்ணிக்கை கொஞ்சம் கொஞ்சமாகவேனும் அதிகரிக்க நாம் முயற்சி எடுக்க வேண்டும்... வந்தே மாதரம்..." என்று பேசி விட்டு அஞ்சனா அமர்ந்தாள். மங்கலான வெளிச்சத்திலும் நெருப்புக் கங்குகள் போல் ராமசாமியின் பெரிய விழிகள் ஒளிர்ந்து கொண்டிருந்ததை ஓரத்து விழிகளால் பார்த்து ரசித்தபடியே அவள் முகத்து வேர்வையைக் கைக்குட்டையால் துடைத்துக் கொண்டாள். ராமசாமி ஒரு பாராட்டுப் புன்னகையை அவளை நோக்கி வீசி விட்டுச் சத்தம் எழாதபடி கைகளை இணைத்துத் தட்டினார். பெண்கள் அனைவரும் அவளைப் பார்த்து வாயாரச் சிரித்துத் தங்கள் பாராட்டுதலைத் தெரிவித்துக் கொண்டார்கள்.

அடுத்து மணவாளநாயுடு பேசினார். தமக்கு இலக்கணமாகவெல்லாம் பேசத் தெரி



யாது என்ற பீடிகையுடன் பேச்சுத் தமிழில் அவர் கிண்டலும் கேலியும் ஆவேசமுமாய் வெளுத்துக் கட்டியதை அனைவரும் வெகுவாக ரசித்தனர்.

"நாயுடுகாரு ஆளுக்குப் பத்து நிமிஷம் - ஜாஸ்தி போனா பதினஞ்சு நிமிஷந்தாங் காணும் ஒதுக்கி இருக்கு. நீர் பாட்டுக்குப் பேசிண்டே போகாதேயும். பெண்கள் காலா காலத்துல அவங்கவங்க வீட்டுக்குப் போய்ச் சேரணும்..." என்று கூட்டத்திலிருந்து ஒருவர் குரல் கொடுத்ததும், மணவாளநாயுடு மிகவும் விரைவாகத் தமது சொற்பொழிவை முடித்து விட்டு, "வந்தே மாதரம்" என்று குரல் எழுப்பி 'உட்கார்ந்தார்.

கன்ட்ரியர்க 'வந்தனா எனும் பெண் நன்றி கூற, கூட்டம் முடிந்தது. மணவாள நாயுடு, "ஏம்மா, உங்க பேரு வந்தனான்னு இருக்கிறதுனாலதான் வந்தனம் கூற உங்களைத் தேர்ந்தெடுத்தாங்களோ?" என்று கூறித் தமது நகைச்சுவைக்குத் தாமே அட்டகாசமாய்ச் சிரித்தார்.

**வ**ழக்கம் போல் எல்லாரும் அவரவர் பாதைகளில் பிரிந்து செல்ல, மணவாளனையும் ராமசாமியையும் அஞ்சனா தன் காரில் ஏற்றிக் கொண்டாள். முதலில் மணவாளன் இறங்கிக் கொண்டார். மணவாளனும் இன்னொருவரும் பக்கத்துப் பக்கத்து வீடுகளில் வசித்ததால் இருவரும் ஒருசேரக்

கடைசியில்தான் இறங்குவார்கள். இன்று அந்த நபர் வராததோடு மணவாளன் தாம் கடைக்குப் போக வேண்டும் என்று சொல்லி ஒரு பெரிய கடை வாசலில் இறங்கிக் கொண்டார். இதற்கு முன்னர் நிகழாத வகையில் காரில் அஞ்சனாவும் ராமசாமியும் மட்டுமே இருந்தனர். கார்க் கண்ணாடியில் தெரிந்த அவரது முகத்தைத் தன்னையும் மீறிச் சில தடவைகள் அஞ்சனா பார்த்து விட்டாள். காரில் பின்னிருக்கையில் உட்கார்ந்து தெருவை வேடிக்கை பார்த்தபடி வரும் ராமசாமி தன் கணவராக இருப்பின், முன்னிருக்கையில் தனக்குப் பக்கத்தில் அமர்ந்து கொண்டு பேசிச் சிரித்தபடி வருவார் என்ற எண்ணம் அவளைத் தாக்கியது. அவள் சிலிர்த்துக் கொண்டாள். தகாத எண்ணம் என்று மனத்துள் சொல்லித் தன்னைக் கண்டித்துக் கொள்ளுபவள் போல் தலையைக் குலுக்கிக் கொண்டாள்.

அதுநாள் வரையில் தாம் உணர்ந்தறியாத ஓர் இறுக்கத்துக்கு ராமசாமியும் ஆளாகி இருந்தார். அஞ்சனாவுடன் தனியாகக் காரில் பயணம் செய்ய நேர்ந்த நிலை அதற்குக் காரணமாக இருக்கலாம் என்ற எண்ணம் வந்தது. பின்னிருக்கையில்தான் அமர்ந்திருக்கிறோம் என்றாலும் நாலு பேர் பார்த்தால் என்ன பேசுவார்களோ என்ற அச்சம் உடனெழுந்தது. ஊர் வம்பால் அந்தப் பெண் பாதிக்கப்படாதிருக்க வேண்டும் என்ற கவலை தோன்றியது.

தமது வீட்டைக் கார் கடந்து விட்டதை அப்போதுதான் ராமசாமி கவனித்தார். "மிஸ் அஞ்சனா, எங்கே யோசனை? கார் எங்காத்தைத் தாண்டிடுத்து" என்றார் கவலாக. அஞ்சனா சட்டென்று பிரேக் போட்டுக் காரை இரண்டு வீடுகள் தள்ளி மூன்றாவது வீட்டு வாசலில் நிறுத்தினாள்.

"ஸாரி" என்றாள்.

அந்த வீட்டு வாசலில் வீட்டுக்கார அம்மாள் நின்றிருந்தாள். அவள் பார்வை ஆழமாக இருவர் மீதும் விழுந்தது.

# 16

சிவப்பிரகாசத்தின் திடீர் வருகை அதிகாரபூர்வமானதாகத்தான் இருக்க வேண்டும் என்று எண்ணினார் ராஜாராமன். முந்தைய வருகையின் போது அரைகுறையாகச் சோதனை செய்து விட்டுக் கடமையைச் செய்ததாய்ப் பேர் பண்ணி விட்டுப் போன அவன், இன்று முனைப்புடன் அதைச் செய்வதற்கு வந்திருக்கிறானோ என்று நினைத்த போதே, கோட்டுப் பைக்குள் தாம் வைத்துக் கொண்டிருந்த நரேந்திரநாத் பானர்ஜியின் கடிதம் ஒரு சுமையாய்க் கனக்கத் தொடங்கியது போல் அவர் உணர்ந்தார்.

மௌனமாகவே அவர் சுட்டிக்காட்டிய நாற்காலியில் உட்கார்ந்து கொண்ட சிவப்பிரகாசம், "எப்படி இருக்கீங்க, சார்?" என்றான் புன்சிரிப்புடன்.

"நன்னாருக்கேன், சிவப்பிரகாசம். நீங்க எப்படி இருக்கீங்க?"

"நானும் நல்லாருக்கேன், சார்."

"உங்க தம்பி, ஞானப்பிரகாசம்?"

"அவனும் நல்லாருக்கான்."

"அவரு வரல்லியா?"

"இல்லே சார். இது பிரைவேட் விசிட், சார். எனக்குத்தான் உங்களைப் பார்க்கணும்."

"ஏதாவது கேஸ் விஷயமாவா?"

"இல்லே சார்..." என்று சொல்லி விட்டு அவன் அவரைப் பார்த்துச் சிரித்தான். அவர் மௌனமாக அவனைப் பார்த்தபடி இருந்தார்.

"...எனக்கும் உங்க இயக்கத்துல சேரணும்னு, சார் நான் போலீஸ் டிபார்ட்மென்டுல இருக்கிறதால அங்ஙன இருந்தபடியே உங்களுக்கு மறைமுகமான உதவிகளைச் செய்ய முடியும்னு நினைக்கிறேன்."

ராஜாராமன் சட்டெனத் தோன்றிய வியப்புக் கலந்த மலர்ச்சியுடனும் ஆழமான புன்சிரிப்புடனும் நிமிர்ந்து உட்கார்ந்தார்.

"நிஜமாவா, சிவப்பிரகாசம்? நிஜமாவா சொல்றீங்க? இல்லே, என்னை ஆதாரங்களோட பிடிக்கிறதுக்கு ஏதாலும் சதியா?" என்று கேட்டு விட்டு அவர் வாய் விட்டு நகைத்தார்.

"நான் சதிகாரனா, இல்லாட்டி நிஜமாவே சொல்றேனாங்கிறது உங்க உள்மனசுக்குத் தெரியும், சார்."

"தெரியுது, சிவப்பிரகாசம். நான் கேட்டது வேடிக்கைக்கு. தப்பா எடுத்துக்காதீங்க. அது சரி, இப்படி எங்க இயக்கத்துல வந்து சேர்றேன்கிறீங்களே, அதனால உங்களுக்குத் தொல்லை ஏற்படாதா? உங்க டிபார்ட்மென்ட்ல கண்டுபிடிச்சுட்டாங்கன்னா?"



அதிகாரி (அமைச்சரிடம்) : 'சொன்னதைச் செய்வோம்' என்று சொல்லி நீங்க மந்திரியானது உண்மைதாங்க; அதுக்காக மரம் நடு விழாவிலே மரந்தான் நடுவேன் செடி நடமாட்டேன்னு பிடிவாதம் செய்தா எப்படிங்க?"

- எஸ். ராஜேந்திரன்

# எழில் கேசத்தின் ரகசியம்!






## அஸ்வினி

ஹோமியோ ஹேர் ஆயில்

**அஸ்வினிக்கு நன்றி!**

நான் மூன்று வருடங்களாக அஸ்வினி ஹோமியோ ஹேர் ஆயிலை உபயோகிக்கிறேன். இதில் குறிப்பிடத்தக்க மருத்துவ குணங்கள் இருக்கின்றன. மாதந்தோறும் வந்துகொண்டிருந்த என் ஒற்றைத் தலைவலியும் கூட இப்பொழுது வருடத்திற்கு ஓரிரு முறையாகக் குறைந்துவிட்டது. உதிர்ந்து கொண்டிருந்த தலைமுடியும் இப்பொழுது உதிர்வதில்லை. நம்முடைய அனைத்து கேசப்பிரச்சனைகளையும் தீர்த்துவிட வந்துள்ள ஓர் அரிய ஹோமியோ மருத்துவத் தயாரிப்பு — அஸ்வினி.

எம். கோபால கிருஷ்ணன்,
இ. ஏ. எஸ் (Retd.),
முன்னாள் சிறப்பு தலைமை செயலாளர்,
ஆந்திரப்பிரதேச அரசு.

விரைவில் எல்லோர் நினைவிலும்
நிலைத்து நிற்கும் ஹேர் ஆயில் — அஸ்வினி!

விற்பனையாளர்கள் :
அஸ்வினி ஹோமியோ & ஆயுர்வேதிக்
பிராடக்ட்ஸ் லிமிடெட்
5-283, எச். பி. ரோடு, மூஸாபெட், ஹைதராபாத் 500 018

---

## இல்லத்தில் திருமண மகிழ்ச்சியா?

ஹாரிங்டன் ரோடில் பட்டான
செய்தி உங்களுக்காக—

# வரதராம்ஸ் சில்க்ஸ்



75 ஆண்டுகளுக்கு மேல் இத்துறையில் புகழ் பெற்ற வரதராம்ஸ் சில்க்ஸ் தரமான கல்யாண பட்டு புடவைகளை தறியிலிருந்து நேரடியாக கிட்டத்தட்ட அதே விலைக்கு உங்களுக்கு வழங்கி வருகிறார்கள்.

*Varadarams - From Weaver to Wearer*



# VARADARAMS SILKS

**88, Harrington Road, Chetput, Madras - 600 031. Ph: 826 6667**
134, T.K. Nambi Street, Kanchipuram-631 503. Ph: 23486/23783/24142
**Open on Sundays**
VISA, Master Card, Mercard Welcome

வரதராம்ஸ் சில்க்ஸ்—வியக்கவைக்கும் விலையில் மிக தரமான பட்டு.



"மானேஜர் காலையிலிருந்து 'சம்திங் ராங் சம்திங் ராங்' அப்படின்னு சொல்றாரே, ஏன்?"
"அவருக்கு வர வேண்டிய சம்திங்கை தவறுதலா கிளார்க் வாங்கிட்டாராம்!"

- கி. சந்திரமோகன்

"கண்டுபிடிக்க முடியாதபடி ஜாக்கிரதையா இருப்பேன் சார், நான் ரகசியப் போலீஸ் இலாகாவில இருக்கிறதுனால மாறுவேஷங்கள்ல சுத்தற வசதி எனக்கு உண்டு. அதை எங்க டிபார்ட்மெண்டையே ஏமாத்த நான் பயன்படுத்திப்பேன்." - சிவப்பிரகாசம் சிரித்தான்.

"உங்க தம்பிக்கு இது தெரியுமா? அவரும் இதுல சேர்றதா இருக்காரா, சிவப்பிரகாசம்?"

"அவனுக்குத் தெரியாது, சார் அவன் ஒரு டைப். அவங்கிட்ட நான் சொல்லல்லே. டிபார்ட்மெண்டுக்காக உழைச்சுப் பெரிசா முன்னுக்கு வரணும்கிற ஆர்வம், அவங்கிட்ட நிறைய இருக்கு. அவன் என் வழிக்கு வர மாட்டான்னு எனக்கு நல்லாவே தெரியும். அதனால அந்தப் பேச்சை அவன்கிட்ட நான் எடுக்கவே இல்லே. அது ஆபத்தாக் கூட முடியலாம்."

"அப்ப? ரெண்டு பேரும் எதிர் எதிர்ப் பாசறைகள்ல இருக்கப் போறீங்க?"

சிவப்பிரகாசம் புன்னகை புரிந்தான்.

"ஒருநாள் உன் தம்பியே திடீர்னு உன்னைப் பத்திக் கண்டுபிடிச்சுடறான்னு வச்சுக்க. அப்ப?"

"இப்ப பேசின மாதிரியே நீங்க என்னை 'நீ'ன்னே பேசுங்க, சார்."

"ஐ'ம் சாரி, சிவப்பிரகாசம். பேச்சுவாக்குல நீன்னு வந்துடுத்து."

"அப்படியே இருக்கட்டும். சாரி எல்லாம் சொல்லாதீங்க, சார்... அப்படியே அவன் கண்டுபிடிக்கிறான்னு வையிங்க. அண்ணன்கிறதுக்காக அவன் ஒருக்கா என்னைக் கண்டுக்காம இருந்துடக்கூடும். இல்லாட்டி அண்ணன்னு கூட பார்க்காம தன் கடமையைச் செஞ்சான்கிற பேருக்கும், பிரமோஷனுக்கும் ஆசைப்பட்டு அவன் என்னைக் காட்டிக் கொடுத்தாலும் கொடுக்கக்கூடும். அதுக்கு நான் தயாரா இருக்க வேண்டியதுதான், சார்! வேற வழியே இல்லே. அப்படியெல்லாம் யோசிச்சு யோசிச்சுத் தயங்கிட்டிருந்தா இது மாதிரி இயக்கத்துலயெல்லாம் சேர்ந்து வேலை செய்ய முடியுமா, சார்?"

"அப்ப, எங்க காங்கிரஸ் கட்சியில நீயும் ஒரு மெம்பர் ஆறே?"

"நம்ம காங்கிரஸ் கட்சின்னு சொல்லுங்க, சார்."

"ரைட். நம்ம காங்கிரஸ் கட்சி. இன்னும் ஒரு முக்கியமான கேள்வி, சிவப்பிரகாசம்."

"கேளுங்க, சார்."

"காங்கிரஸ்ல சேரணும்கிற எண்ணம் எப்படி உனக்கு வந்தது? என்ன காரணம்?"

"என்ன சார் இது? நீங்க எதுக்கு அதுல இருக்கீங்களோ அதே காரணத்துக்காகத்தான். வெள்ளைக்காரங்களை இந்த நாட்டை விட்டு வெளியேத்தணும்கிற ஒரே காரணத்துக்காகத்தான். சார், நான் ஒரு துண்டுப் பிரசுரம் படிச்சேன்... அதுவும் ஒரு காரணம்... இந்தாங்க, நீங்களும் பாருங்க..." என்றபடி சிவப்பிரகாசம் தனது டயரியிலிருந்து அதன் அட்டை மடிப்பில் செருகி வைத்திருந்த இளஞ்சிவப்பு வண்ணத் தாள் ஒன்றை எடுத்து விரித்து அவரிடம் கொடுத்தான்.

அதைக் கையில் வாங்கியதுமே ராஜாராமன் சிரித்தார் : "இது நாங்க அச்சடிச்சு விநியோகிச்ச நோட்டீஸ்தான், சிவப்பிரகாசம். இன்னொரு வேடிக்கையான விஷயம் சொல்லட்டுமா?" என்று தொடங்கிய அவர் அன்று அவன் தன் தம்பியுடன் தமது வீட்டைச் சோதனை இட வந்த போது கூடத்தில் தம் மகன்களுடன் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தவன் நரேந்திரநாத் பானர்ஜி என்பதையும் அவன் சம்பந்தப்பட்ட விஷயங்களையும் அவனிடம் விரிவாகத் தெரிவித்தார். லண்டனிலிருந்து பிரான்சுக்குத் தப்பி ஓடிய தம் மகன் தற்போது எங்கிருக்கிறான் என்பதே தெரியவில்லை எனக் கூறிக் கண்கலங்கினார்.

அப்போது அவரது அறைக் கதவு தட்டப்பட்டது. அவசரமாய்க் கண்களைத் துடைத்துக் கொண்டு அவர் எழுந்து போய்க் கதவைத் திறந்தார். கதவுக்கு வெளியே காவல் துறை அதிகாரி ஒருவர் நின்றிருந்தார். ஆங்கிலோ இந்தியர் என்பது பார்த்த மாத்திரத்தில் தெரிந்தது. உடுப்பிலிருந்து அவர் டெபுடி சூப்பரின்டென்டென்ட் என்பதும் அவருக்குப் புரிந்தது. ராஜாராமன், "குட்மார்னிங்" என்று கூறிவிட்டுத் திரும்பிப் பார்த்தார். சிவப்பிரகாசம் எழுந்து நின்று கொண்டிருந்தான். டி.எஸ்.பி.யைப் பார்த்ததும் விறைப்பாக நின்று சல்யூட் அடித்தான். அந்தச் சில கணங்களுக்குள் ராஜாராமன் ஏதேதோ எண்ணிக் கலங்கிப் போனார். சிவப்பிரகாசத்தை நம்பவும் முடியாமல் நம்பாதிருக்கவும் முடியாமல் அவர் ஆடிப் போனார்.

(தொடரும்)



வண்ணப்படம் : அமிர்தம்


# கல்கி தீபாவளி மலர் '94

**கலையழகுடன் இலக்கியச் செறிவு;**
**வண்ணங்களுடன்**
**வியப்பூட்டும் வடிவமைப்பு!**

*உங்கள் பிரதிக்கு உள்ளூர் ஏஜெண்டிடம்*
*இன்றே பதிவு செய்து கொள்ளுங்கள்!*

விலை ரூ 40/- தபால் செலவு தனி



# லவ், ராஜகுமார்

மழுப்பப்பட்டு மங்கலாக ஒளி. பனீர் வெண்மையில் சில மேசை, நாற்காலிகள். மேசை மத்தியில் மண் சட்டியில் பிளாஸ்டிக் பூங்கொத்துக்கள்.

பின்னணியில் உறுத்தாமல் வழியும் வயலின் இசை இனிமை.

"இந்த ரெஸ்டாரெண்டின் சூழ்நிலை பிடிச்சிருக்கா?" என்கிறான் அவன்.

"ம்!" என்கிறாள் அவள்.

அவன் கையில் அவள் பெயர் பொறித்த லாக்கெட்டுடன் ப்ரேஸ்லெட். கழுத்தில் க்ரீம் தடவிப் பளபளத்த தலைமுடி. அவனின் ஒவ்வொரு அணுவும், அசைவும் பணம் பணம் என்று பறைசாற்றுகிறது.

இலேசாக உதட்டுச் சாயம் தீட்டி, அவள் மெலிய மேக்கப்பில் இருந்தாள். அபாரமான அவள் பர்சனாலிட்டிக்கு அவன் ஈடில்லைதான். இருந்தும்...

இருந்தும் அவன் தாளாத காதலுடன் அவளைப் பார்க்கிறான்.

அதைக் கண்டுகொண்ட அவள் முகத்தில் பரவசக் கிளர்ச்சி...

"உன்னைப் பார்த்துக்கிட்டே இருக்கலாம் போலிருக்கும்மா!"

அவள் உதட்டைக் குவித்து உற்சாகமாக 'உம்' கொட்டுகிறாள்.

"ஒரு நாள் பார்க்கலைன்னா பைத்தியம் பிடிச்சிடும் போலிருக்கு."

"ஆல்ரெடி எனக்குப் பைத்தியம் பிடிச்சுருச்சுப்பா!"

அவன் செயற்கையாகத் திடுக்கிட்டு, "வ்வாட்?" என்கிறான்.

"உங்க மேல பைத்தியம்!"

மறுபடி மௌனம்; பார்வைப் பரிமாற்றம். வயலின் வேறு மெட்டுக்குத் தாவுகிறது.

அருகில் வந்து நிற்கும் வெள்ளைச் சீருடை வெயிட்டர் பொறுமையிழந்து 'ம்க்கும்' என்று கனைத்து அவர்களைக் கலைக்கிறான்.

"ஆர்டர் நீங்க சொல்லுங்கப்பா."

"நோ!" அவன் உறுதியாகத் தலையசைத்து, "நீ ஆர்டர் செய் டியர்!"

"சரிப்பா. உங்களுக்கு என்ன ஸ்வீட் பிடிக்கும்?"

"உனக்குப் பிடிச்ச அயிட்டமா ஆர்டர் பண்ணும்மா."

வெயிட்டர் ஆர்டருடன் அகன்றதும் அவன், "இனி எனக்குன்னு தனியா விருப்பம் ஏதுமில்லை!"

நெகிழ்ச்சியில் அவள் கண்கள் கலங்க அவனைப் பார்க்கிறாள்.

"எஸ்! உன் மேல அவ்வளவு லவ்!" என்று கண் சிமிட்டிச் சிரிக்கிறான்.

"நாளைக்குச் சந்திப்பு எங்கேப்பா?"

மறுநாள்.

பின்னணியில் நீலக்கடல். தொடுவானத்தில், ஓர் ஓரத்தில் அசையாத கட்டுமரம். அதில் சில்ஹௌட் நிழலாய் சிறிய கறுத்த உருவம். அலை ஓசை சன்னமாக ஒலிக்கிறது.

இருவருக்கும் இடையில் சற்று இடைவெளி. அவன் தலைகுனிந்து மணலில் ஏதோ எழுதுவது போல் பாவனை செய்கிறான்.

"பட்டாணி சுண்டேல்!" என்று கூவியபடி ஒருவன் கடந்து செல்கிறான்.

"நான் வந்து அரைமணியாச்சு!"

"சாரிம்மா!"

"ஏன்பா லேட்டு?"

"கார் ரிப்பேர். ஆட்டோ கிடைக்காம திண்டாட்டமாயிருச்சு. வழிநெடுகப் பார்த்தேன். பஸ்களில எவ்வளவு நெரிசல்! தினம் தினம் எப்படித்தான் போயிட்டு வர்றியோ...?"

"என்னை மாதிரி மிடில் கிளாஸுக்கு வேறு வழி?"

"எல்லாம் கொஞ்ச நாள்தான்" அவன் முரட்டுத்தனமாக முணுமுணுக்கிறான்.

"எவ்வளவு பெரிய பணக்காரர் உங்கப்பா! நம்ம காதலை ஒப்புக்குவாரா?"

அவள் முகத்தில் சோகம் வந்து அப்புகிறது.

அவன் சலிப்புடன், "ஒப்புக்குவார்னு எத்தனை தடவைதான் சொல்றது?"

அவள் குரல் கவலையில் கம்ம, "ஏணி வச்சாலும் எட்டாத ஸ்டேட்டஸ்ல நீங்க. எங்கப்பாவால பெரிசா சீர் எதுவும் செய்ய முடியாதுப்பா."

"சீர் கேக்கற கேவலமெல்லாம் என் அப்பா, அம்மாவுக்கு அறவே பிடிக்காது. கட்டின சேலையோட வந்தாப் போதும். உன்னைத் தங்கமாத் தாங்குவாங்க பாரேன்..."

அது விசாலமான ஹால். ஒரு சர




விளக்கு தொங்குகிறது. சுவரில் இயற்கைக் காட்சி ஓவியங்கள்.

சோபாவில் தலை நரைத்த அவர் பேப்பர் பார்க்கிறார்.

எங்கோ பூஜை அறையிலிருந்து ஒரு வயதான பெண் குரலில் பாசுரம் ஒலிக்கிறது.

அவன் காப்பிக் கோப்பையுடன் பக்க வாட்டிலிருந்து ஹாலினுள் பிரவேசிக்கிறாள். அவள் முகத்தில் நிறைவும், பொலிவும் பூசியிருக்கிறது.

"நீ ஏம்மா எடுத்துக்கிட்டு வந்தே? நான் வந்து வாங்கிக்க மாட்டேனா?"

மாமனார் காபி பருகியபடி, "நீ என் பொண்ணு மாதிரி. எது வேணும்னாலும் தயங்காம கேட்கணும் என்ன?" என்கிறார் அன்பான குரலில்.

அவள் நாணமுடன் தலையசைக்கிறாள். திடீரென்று அவள் தள்ளாடவும் மாமனார் "என்னாச்சம்மா" என்று அவசரமாக எழுகிறார்.

அவளின் மாமியாரும், கணவனும் பதற்றத்துடன் பிரவேசிக்கிறார்கள்.

"ஒண்ணுமில்லே. தலை சுத்தின மாதிரி இருந்தது. இப்ப சரியாயிடுச்சு."

"டேய், டாக்டருக்குப் போன் பண்ணுடா."

"உஷ்... இன்னிக்கு உனக்குக் கட்டாய ரெஸ்ட்! நான்தான் சமையல்" என்ற மாமியார் அவள் கையைப் பாசமுடன் பற்றிக் கொள்கிறாள்.

கிணற்றுக்குள்ளிருந்து போல் விசில் சத்தம் ஒலிக்கிறது.

அவன் - லதா - பதற்றத்துடன்

**பத்மா ரவிசங்கர்**

புறப்பட்டாள்.

லதா களைத்திருந்தாள். தவிர்க்க முடியாத தாமதம் புத்தியில் உறைக்க, அவசர அவசரமாக ஆட்டோ பிடித்தும் -

அவள் அண்ணன் தெரு முனையிலேயே மடக்கினான்; சிடுசிடுத்தான். அண்ணன் முகத்து எரிச்சலை அவளால் புரிந்து கொள்ள முடிந்தது. ஹூம்... தடையாயுள்ள தங்கை...

''அவங்க எவ்வளவு நேரம் காத்திருப்பாங்க...?''

வீட்டின் பின் வழியாக அழைத்துச் செல்லப்பட்டாள். லதா ஓர் அறையில் ஒதுங்கினாள். ஒடுங்கினாள்.

அவளுக்கு அலங்காரம் ஆரம்பித்தது. திறந்திருந்த ஜன்னல் வழியாக எட்டிப் பார்க்க, அவள் சற்றும் விரும்பவில்லை. இது எத்தனையாவதோ..?

அடுத்திருந்த ஹாலிலிருந்து, குரல்கள் கேட்டன.

"லதா எந்தக் கம்பெனில வேலைன்னு சொன்னீங்க?''

"மாருதி கெமிகல்ஸ்."

"சம்பளம் எவ்வளவு தேறும்?''

"ரெண்டாயிரம் கிட்டங்க. இது தவிர ஒரு நாடகக் குழுவுலயும் இருக்கா."

"அட!"

"இப்பக் கூட நாடகத்துல நடிச்சுட்டுத் தான் வர்றா! இன்னிக்கு மதியம் ஏதோ ஸ்பெஷல் ஷோவாம்."

"டிராமாவுக்கும் வருமானம் வருங்களா?"

"வரும்மா..."

"மேல் வருமானம் இந்தக் காலத்துல தேவைதானுங்களே! நல்லது. மத்த விஷயம் பார்ப்போமா?''

பின்,

"யாருக்குச் செய்யப் போறீங்க?" என்பது அடிக்கடி தட்டுப்பட, தீவிரமான பேரம் துவங்கியது.

சற்று நேரத்தில், லதா அழைக்கப் பட்டாள். இயந்திரமாய் எழுந்து கொண்டாள். 'வில்லி' பேச வந்தவர்களை நமஸ்கரிக்கச் சென்றாள்.

---

# "காகித வயல்கள்"

ஒரு பானை நிறைய சோறு.
அதில் பல ஓட்டைகள்.
எலிகள் புகுந்தன.



பானையில் எத்தனை ஓட்டைகள்
என்று கண்டுபிடிக்க ஒரு கமிட்டி.
புகுந்தவை எத்தனை எலிகள்
என்று கண்டு பிடிக்க
இன்னொரு கமிட்டி.
பானையில் சோறு இருந்ததா
என்பதற்கு ஒரு கமிட்டி.
ஒரு கமிட்டி சரியாகச் செயல்படுகிறதா
என்று கண்காணிக்க ஒரு கமிட்டி.
காகிதச் சவங்களின் மார்ச்சுவரியில்...
கமிட்டிகள்..கமிட்டிகள்..
கமிட்டிகளே-நம் நாடாளுமன்றத்தின்
படிக்கட்டுகள் ஆயின.
ஒரு கமிட்டி –
துணிந்து மலையைக் கெல்லி
எலியைப் பிடித்தது.
அந்த 'எலியாக' இருப்பவர்களே;
அந்த எலியை வேடிக்கை பார்க்கக்
கூட்டம் சேர்த்தார்கள்.
எங்கே எலி?
"நடவடிக்கை எடுக்கப்பட்டு விட்டது"
எலியே எழுந்தது.
எலியே எழுதி வாசித்தது.
"பானையின் மீதும் குற்றம் இல்லை."
"எலியின் மீதும் குற்றம் இல்லை.
"ஓட்டைகள் இருந்ததுதான் குற்றம்."
தீர்ப்பு அளிக்கப்பட்டு விட்டது!

'ருத்ரா'

## உங்களுடைய
நிரந்தர வைப்புத் தொகைக்கு
கவர்ச்சிகரமான

# 30%

வட்டி
வழங்கப்படும்



## இலவசம்!
## சிங்கப்பூர் உல்லாச பயணம்!



| ★ ரூ. 1 லட்சம் |
| --- |
| வைப்புத் தொகை செலுத்துபவருக்கு சிங்கப்பூர் சென்றுவர விமான டிக்கட். |
| ★ ரூ. 50,000/- |
| வைப்புத் தொகை செலுத்துபவருக்கு மாலத்தீவு சென்று வர விமான டிக்கட் |
| ★ ரூ. 25,000/- |
| வைப்புத் தொகை செலுத்துபவருக்கு மைசூர் சென்று வர முதல் வகுப்பு ரயில் டிக்கட் வழங்கப்படும். |

சிறப்பு
குலுக்கல் நாள்:
1-11-1994

இப்பரிசுகள் குலுக்கல் மூலமாக தேர்ந்தெடுக்கப்படும் ஓர் அதிர்ஷ்டசாலிக்கு வழங்கப்படும்.

★ முதல் முறையாக தவணை முறை திட்டத்தில் நகைகள் வாங்க ஓர் அரிய வாய்ப்பு!

★ எங்களது ஷோரூம் முழுவதுமாக காப்பீடு செய்யப்பட்டுள்ளது (Fully Insured)

★ டெபாசிட் (வைப்புத் தொகை) செலுத்துபவர்களுக்கு தங்க நகைகளில் 2% சிறப்பு தள்ளுபடி

★ இந்தச் சலுகை முதல் 1000 நபர்களுக்கு மட்டும்






## பாரதி ஜெம்ஸ் & ஜூவல்லர்ஸ்
F-7, முதல் மாடி, ஸ்பென்சர் பிளாசா,
769, மவுண்ட்ரோடு, சென்னை - 600 002.
போன்: 8534280. பேக்ஸ்: 91-44-8521782

வட்டித்தொகையை பின்தேதியிட்ட காசோலைகள் முன்னதாகவே வழங்கப்படும்

இச்சிறப்பு இலவச பரிசு திட்டங்கள் அனைத்தும் 1-11-94 வரை மட்டுமே!

தி.நகர் உஸ்மான் ரோட்டில் அதிநவீன வைரம் மற்றும் தங்கச்சுரங்கம் உருவாகிறது!

A Director's viewpoint is not to direct some one but to direct himself.''
— Robert Bresson

ஓர் இயக்குநர் தன்னைத்தானே சரியான முறையில் இயக்கிக் கொள்கின்ற பக்குவம் வந்த பிறகுதான் மற்றவர்களை இயக்கி வைக்க முடியும் என்பதை அனுபவ பூர்வமாக மட்டுமே நான் உணர்ந்திருந் தேனே தவிர, ஃபிரெஞ்ச் திரைப்பட இயக் குநர் Robert Bresson ரத்தினச் சுருக்கமாகச் சொல்லிய இதே கருத்தை இதற்கு முன்பே எனக்குச் சொல்லத் தோன்றியதில்லை.

இந்தத் தொடரில் சில நினைவலை களோடு, சில நேரங்கள், சில சம்பவங்கள் இவைகளுடைய அடிப்படையில் நாடகம், சினிமா பற்றிய ஆக்க பூர்வமான ஒரு 'அகா டமிக் அப்ரோச்'சுடன் கூடிய ஆய்வுகளை ஆங்காங்கே நடத்த விரும்புகிறேன். நுனிப் புல் ஒட்டமாக மட்டுமே இல்லாமல் புல் லின் வேர்களைத் தொட்டுப் பார்க்க விரும் புகிறேன்.

இதிலே எனக்கு ஒரு சின்ன கஷ்டம் உண்டு. நாடகத்தையும் சரி சினிமாவையும் சரி அனுபவ ரீதியாக நானே கற்றுக் கொண் டேனே தவிர நாடகப் பள்ளி, திரைப்படக் கல்லூரி போன்ற அமைப்புகளில் படித்து அறிந்து கொண்டவன் இல்லை. நான் நாட கத்திலும் சினிமாவிலும் கையாண்ட யுக்தி களுக்கு நாடகம், சினிமா இவற்றை முறை யாகப் பயின்றவர்கள் சில Bombastic டெக்னிகல் பெயர்களைச் சொல்லக் கூடும். அவற்றின் பெயர்கள் தெரியாமலேயே அவற்றை நான் பயன்படுத்தியிருப்பேன்.

அதே போலத்தான் நடிக நடிகையர் களுக்கு நான் சொல்லிக் கொடுத்த நடிப்புப் பாடங்களிலும், அவர்களிடமிருந்து அவர் களுடைய தனித்தன்மையையும் தனிப்பட்ட அவர்களது திறமைகளையும் அடையாளம் காட்டியவன் என்கிற வகையிலும், நடிப்பில் ஒரு 'டிகிரி' வாங்கிய ஆசிரியராக இல் லாமல் ஒரு 'Layman' ஆக வெறும் அனுப வங்களை மட்டுமே வைத்துக் கொண்டு ஓர் இயக்குநராகப் பணி புரிந்து வந்திருக்கிறேன்.

நாடகம் என்பது சினிமாவின் தாய் என்பார்கள். நாடக அனுபவங்களுடன் சினிமாவில் பிரவேசித்தவர்கள் பலர் உண்டு.

சிவாஜியிலிருந்து, கே.பி.யிலிருந்து, விசு வரை.

நாடகத்திலிருந்து சினிமாவுக்கு வந்தவன் நான் என்பதால் சினிமாவுக்கு வந்த பின் னரும் கூட அவற்றில் நாடகத்தின் பாதிப் பும், ஆளுமையும் அளவுக்கு மீறிக் காணப் பட்டதாக விமர்சகர்கள் குறைகூறியதுண்டு. இது உலகெங்கிலும் உள்ள ஒரு பொதுவான குற்றச்சாட்டு.

''An actor or director coming from theater brings with him inevitably its conventions and morality and their loyalty to theater art.''

இதைச் சொன்னதும் 'Robert Bresson' தான். நாடகத் தன்மையின் ஆக்கிரமிப்பி

# நினைவலைகள்

லிருந்து முற்றிலும் விடுபட்டு, சினிமா என் கிற மீடியத்திற்குள் என்னை முழுமைப்படுத் திக் கொள்ள சில ஆண்டுகள் பிடித்தன.

சினிமா என்பது என்ன?

ஒரு சின்ன உதாரணம்.

ஓர் அறுபத்தைந்து வயதுக்காரர் ஒரு குளக் கரையின் ஓரமாக நடந்து வந்து கொண்டிருக்கிறார். இது 'லாங் ஷாட்' :

உருவகப்படுத்திப் பார்க்க சாருஹாசன் என்று வேண்டுமானால் வைத்துக் கொள் ளுங்கள்.

தனது வலப்பக்கம் அந்தப் பெரியவர் பார்க்கிறார். இது அவரது குளோசப்.

Cut back to another close up.

குளக்கரையில் கோவணத்துடன் பாண்டி விளையாடிக் கொண்டிருக்கும் ஒரு சிறுவன், தனது பொக்கை வாயுடன் சிரிக் கிறான்.

Camera cuts back to the old man.

பெரியவர் புன்னகை செய்கிறார்.

இப்பொழுது இந்த வயதான பெரியவர் ஒரு தயாள குணம் நிறைந்த ஒரு முதியவ

ராகத் தெரிகிறார்.

நடுவிலேயுள்ள அந்தச் சிறுவன் ஷாட்டிற்குப் பதிலாக அதே குளத்தில் பாதி உடைகளோடு குளித்துக் கொண்டிருக்கும் ஒரு யௌவனப் பெண்ணின் 'ஷாட்'டைப் போட்டுப் பார்ப்போம்.

இப்பொழுது அந்த முதியவர் ஒரு வக்ரபுத்தியுள்ள ஒரு சபலஸ்தர் என்று நினைப்பீர்கள்.

வசனங்கள் எதுவுமே இல்லாமல் நமக்குச் சம்பவங்கள் புரியும் போது தான் அது சினிமா! இதையே தான் Alfred Hitchcock சொன்னார் :



• சொல்லத்தான் நினைக்கிறேன் : கமல் (படம் உதவி : பிலிம் நியூஸ் ஆனந்தன்)

"In a good movie the sound could go off and the audience would still have a perfectly clear idea of what was going on."

நடிக நடிகையர்களுக்கு இயக்குநர் நடிப்புச் சொல்லிக் கொடுப்பது குறித்து, காலம் காலமாக வாதம் நடந்து கொண்டுதான் இருக்கிறது.

'நடிக்கவே நடிக்காதே; just behave' என்று நல்ல இயக்குநர்கள் சிலர் சொல்வார்கள். ஆனாலும் முற்றிலும் புதிய முகங்களை வைத்து இயக்குகின்ற நேரங்களில் அவர்களுக்கு நடப்பதிலிருந்து, சிரிப்பதிலிருந்து, வசனம் பேசும் ஏற்ற இறக்கங்கள் வரை எல்லாமே சொல்லிக் கொடுக்கத்தான் வேண்டியிருக்கிறது; அவர்களாகவே நயங்களையும் நுணுக்கங்களையும் புரிந்து கொள்ளும் வரை.

**நா**னும் கமல்ஹாசனும் இணைந்து ஏறத்தாழ முப்பது படங்களில் பணியாற்றியிருக்கிறோம். இதையே "கமல்ஹாசனுடன் நானும் வளர்ந்தேன்; கமல் என்னுடன் கூடவே வளர்ந்தார்" என்று அடிக்கடி நான் குறிப்பிடுவதுண்டு.

ஒரு குழந்தை நட்சத்திரமாக மேடை அனுபவங்கள் கமல்ஹாசனுக்கு உண்டு என்றாலும் ஒரு வளர்ந்த வாலிபனாக, ஒரு Adolescent ஆக நான் அவரை திரையில் பயன்படுத்த ஆரம்பித்த நேரங்களில் அவருக்கு நான் நடிப்பு சொல்லிக் கொடுத்திருக்கிறேன்; வசன உச்சரிப்பும், ஏற்ற இறக்கங்களும் இன்ன பிற நுணுக்கங்களும் நான் சொல்லிக் கொடுத்திருக்கிறேன்.

"யார் இந்தத் துடிப்பான இளைஞன்?" என்று ரசிகப் பெருமக்கள் ஆச்சர்யப்பட்டு கேட்கும்படியான அளவுக்கு 'சொல்லத் தான் நினைக்கிறேன்' திரைப்படத்தில் அற்புதமான ஒரு குணசித்திர வில்லனாகிய இளைஞன் பாத்திரத்திலே கமல்ஹாசனை அறிமுகப்படுத்தியிருந்தேன். அது வில்லன் பாத்திரம்தான் என்றாலும் ஒரு சுவாரஸ்யமான, வித்தியாசமான ஒரு குண சித்திரம். A sweet rascal!

ஒரு வயதானவருக்கு (பூர்ணம் விசுவநாதன்) மாலையிட்ட ஒரு இளம் பெண்ணை (ஜெயசுதா) அவளது திருமண வரவேற்பு விழாவிலேயே தனது வசீகரத் தினாலும், நாட்டியத் திறமையினாலும் கண்டி இழுத்து, அவள் தன் மீது மனதைப் பறிகொடுக்க வைக்கின்ற ஒரு குணசித்திரம்.

இன்னொரு காட்சியில் தன்னுடன் தொடர்பு கொள்ள நினைத்தால் இரவு 8 மணி அளவில் டெலிபோனில் தொடர்பு கொள்ளும்படியாகவும் தனது நண்பனுடன் பேசுவது போல் நடித்து புத்திசாலித்தனமாக தனது டெலிபோன் நம்பரையும் அவளுக்கு மறைமுகமாக எடுத்துரைக்கும் படியான ஒரு காட்சி. இப்படிப்பட்ட டெலிபோன் நம்பரைக் குறிக்கும் காட்சிகளில் ஏதோ ஒரு நம்பரைக் கொடுத்து விடுவது வீண் வம்பில் வந்து முடிவதுண்டு.

அதற்காகவே நமக்குத் தெரியப்பட்டவர்களின் நம்பர்களையோ அல்லது தயாரிப்பு நிறுவனத்தின் நம்பரையோதான் உபயோகப் படுத்திக் கொள்வோம். அந்த வகையில் உதயம் புரொடக்ஷன்ஸ் தயாரிப்பு நிறுவனத்தின் டெலிபோன் நம்பரையே கமல்ஹாசன் சொல்வதாக வைத்திருந்தேன்.

'சொல்லத்தான் நினைக்கிறேன்' திரைப் படம் வெளியானதும் அந்த தயாரிப்பு நிறு

**கே. பாலசந்தர்**

வன டெலிபோன் நம்பருக்கு தினம் இரவு எட்டு மணியிலிருந்து இடைவிடாமல் பத்து மணி வரைக்கும் மாறி மாறி பெண்களிடமிருந்து 'போன்கால்'கள் வந்து கொண்டே இருக்கும், கமல்ஹாசன் இருக்கிறாரா என்று கேட்டு. அதுவும் நூற்றுக் கணக்கான இளம் பெண்களிடமிருந்து.

"கமல்ஹாசன் வீட்டு டெலிபோன் இல்லேம்மா இது; கம்பெனி டெலிபோன் நம்பர்" என்று சளைக்காமல் சொல்லிக் கொண்டே இருக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

அதிலிருந்து ஒன்று மட்டும் நிதர்சனமாகத் தெரிந்தது.

இந்த ஒரு படத்திலேயே கமல்ஹாசனுக்கு இளம் பெண்கள் மத்தியில் ஏற்பட்டு விட்ட மிகப் பெரும் பாப்புலாரிடி.

இந்தப் படத்தை இன்று நான் பார்த்த போது கமல்ஹாசனிடம் என்னுடைய பாதிப்பு அதிகமிருந்ததை என்னால் உணர முடிந்தது.

ஆனால் போகப் போக கமல் எனது படங்களில் தொடர்ந்து நடிக்க அவருடைய திறமையின் வளர்ச்சியைத் தொடர்ந்து கண்கூடாய்ப் பார்த்து வந்ததன் விளைவாக நான் அடக்கி வாசிக்க என்னை மெல்ல மெல்ல தயார்படுத்திக் கொண்டு எனது Influence அவர் மீது திணிக்கப்படாமலும் அவருடைய சொந்த Creativityயுடன் சுதந்திரமாகச் செயல்படவும் அவருக்கு சந்தர்ப்பங்களை உண்டாக்கிக் கொடுத்தேன்....

இன்றைக்கு கமலின் நடிப்புச் சாதனைகளுக்கு எல்லைகள் இருப்பதாகத் தோன்றவில்லை.

ஒரு சின்ன Clipping:

படம் : புன்னகை மன்னன்....

தற்கொலைக்குத் தயாராகிவிட்ட கமல் தனது காதலியின் கைகளைக் கோத்துக் கொண்டு மலையுச்சியிலிருந்து மடுவிற்குள் குதிக்கும் அந்தக் காட்சி.

அவள் மட்டும் மடுவிற்குள் விழுந்து இறக்க, அவன் மரக்கிளைகளில் மாட்டிக் கொண்டு காதலி மட்டும் சாவதைப் பார்த்துக் கதறும் அந்தக் காட்சியில்.... கமலை மரக்கிளையில் மாட்டியாகி விட்டது.

நான் சொன்னேன் :

"கமல்! காதலியின் பெயரைச் சொல்லக் கூடாது... வசனம் ஏதும் இருக்கக் கூடாது... உன்னுடைய வெறும் கதறல்தான் இருக்க வேண்டும்... நீ பார்க்கும் போதே கீழே ரத்தம் ஆறாக ஓட உனது காதலி அடிபட்டு செத்துக்கிடக்கிறாள். சட்டை கிளைகளில் மாட்டிக் கொண்ட நிலையில் உன்னால் வேறு எதுவும் செய்ய முடியாமல் உனது கதறல். உனது ஓலம்.. உனது உணர்ச்சிகளின் வெளிப்பாடு; இந்த ஷாட் ஒரு Million Dollar Shot. உனது திறமை முழுவதும் இந்த ஷாட்டில்."

"ரெடி ஸார்!" என்றார் கமல்.

காமிரா ஓடுகிறது... இரண்டு காமிரா வைத்து இந்த ஷாட் எடுக்கப்படுகிறது...

'ஆக்ஷன்' என்று கத்தினேன்....

கமல் கதறினார்... கதறினார்.... கதறிக் கொண்டே இருக்கிறார்.... விதவிதமான கதறல்கள்; நினைத்து நினைத்து எழும் வித்தியாசமான அழுகையும் கதறலும்...

யூனிட் முழுவதும் சில்லிட்டு நிற்கிறது...

நான் பிரமித்து நிற்கிறேன்...

எனக்கு 'Cut' சொல்லவே தோன்றவில்லை!

இப்படியும் ஒரு மரண ஓலம் இருக்க முடியுமா? நான் விக்கித்துப் போனேன். என்னையே மறக்கிறேன்;

இன்னமும் நான் 'Cut' பண்ணவில்லையேயென்று கமலும் தொடர்ந்து கதறிக் கொண்டே இருக்கிறார்.

எனது உதவியாளர் என்னைத் தொட்டு எனக்கு நினைவுபடுத்துகிறார்.

நானும் உணர்ச்சி வசப்பட்டு கண்களில் நீர் பொங்கி வர அழுதபடியே 'Cut' என்று சொல்கிறேன். எனது அழுகை நிற்க சிறிது நேரம் பிடிக்கிறது.... ஆனால் Cut சொன்ன அடுத்த வினாடியே கமல் கனவு உலகத்திலிருந்து நிஜ உலகத்திற்கு நொடியில் திரும்பி வருகிறார்.

யூனிட்டில் உள்ள அத்தனை பேரும் கைதட்டுகிறார்கள்.

With him acting is an act of child birth என்று தோன்றியது எனக்கு.

Charles Laughton என்கிற நடிகரைப் பற்றி Alfred Hitchcock ஒரு முறை சொல்லியிருக்கிறார்:

"You can't direct Charles Laughton. The best you can hope for is to be a referee only."

இன்றைக்கு அதே நிலைதான் எனக்கும்! அவரை வைத்து எடுக்கப் போகும் அடுத்த படத்தில்:

(தொடரும்)



"திருப்தியா சாப்பிட்டீங்களா? வேற என்ன வேணும் சார்?"

"அண்ணாநகர் திரும்பறதுக்கு பஸ்ஸுக்குச் சில்லறை வேணும்!"

— கு. அருணாசலம்

# மிக அற்புதமான ஏழு...
# மேத்தா வைரத் தோடு
# ஒவ்வொன்றிலும் இருப்பது...



**7-கல் அற்புதம் :**

மகத்தான 7-கல் வைரத் தோடு, வைர நிபுணருக்கும், அதில் கைவினைத்திறன் காட்டும் கலைஞருக்கும் இதைவிடப் பெரிய பொறுப்பு இருக்க முடியாது. ஏனெனில் குறைகளே இல்லாத, ஒன்றுக்கொன்று மிகமிகப் பொருத்தமான 14 வைரங்களைத் தேர்ந்தெடுக்க, நுட்பமாகப் பகுத்தறியும் பார்வை மட்டும் போதாது. அவற்றை மிகத் துல்லியமாக அறுக்க, தேர்ச்சி பெற்ற கைகள் மட்டும் போதாது.

வைரத்தின் பளபளப்பான ஒவ்வொரு பட்டையையும் சிறப்பாக அமைக்க, மகத்தான திறமை மட்டும் போதாது. இன்னும் பல சிறப்புகள் சேர்ந்தால்தான் இந்த 7-கல் அற்புதத்தை உருவாக்க முடியும்.

**இந்த அற்புதத்தின் பின்னணியில் இருப்பவர்கள் :**

7-கல் வைரத் தோடு, சாதாரணமான ஒரு நகை அல்லவே... மேத்தா நிறுவனத்தைப் பொறுத்தவரை இது மிகமிக முக்கியத்துவம் வாய்ந்தது. கைவினைப் பணியைச் செய்வதற்கு முன்னர், "தோஷங்கள்" இருக்கின்றனவா என்று ஒவ்வொரு வைரமும் பரிசோதிக்கப்படுகிறது. அதை செய்பவர்கள்... வைரங்கள் என்றாலே **பாபாலால்** என்ற பெருமையை அதற்கு ஏற்படுத்தித் தந்த அதே குழுவினர்.. **சுரேந்திர மேத்தா, துஷார், நரேஷ்** மற்றும் **அபய்,** 100 ஆண்டுகளுக்கும் மேலான பாபாலாலில் இவர்கள் இணைந்து பெற்ற அனுபவமும் தேர்ச்சியும் சேர்ந்து உருவானதுதான் **மேத்தா வைரத் தோடு** .. அற்புதமான ஒரு கலைப் படைப்பு.

**Mehta**
JEWELLERY

40, திருமலைப் பிள்ளை ரோடு, தி. நகர், சென்னை - 600 017. தொலைபேசி : 8283130
நேரம் : காலை 10.00 முதல் பிற்பகல் 1.30 வரை பிற்பகல் 2.30 முதல் இரவு 7.00 வரை

ARTIG/1549

# அசத்தலான டயலாக் போட்டி முடிவு

**பி**ன் வரும் நான்கு சூப்பர் டயலாக்குளை எழுதி அனுப்பியவர்கள் ரூ.250/- பரிசைப் பகிர்ந்து கொள்கின்றனர்:

கிரேஸி மோகனின் "மாது மிரண்டால்" நாடகத்தில்,

சேஷகோபாலன்:- கல்கத்தாவில் என் பெண்ணுக்கு ஒரு வரன் பார்த்தேன். பையனின் தாயார் பையன் ஆபீஸ் போறச்ச டீஸண்ட் ஆக இருக்க டிஜிட்டல் வாட்ச், கோட்சூட், சௌகரியமாகப் போக ஸ்கூட்டர் எல்லாம் கேட்டா. சரின்னு ஒத்துண்டேன். ஆனா கடைசியா ஒண்ணு கேட்டா! இந்த சம்பந்தமே வேணாம்னு வந்துட்டேன்!

இராமனுஜம்:- அப்படி என்னடா கேட்டா?

சேஷகோபாலன்:- பையன் ஆபீஸ் போகறதுக்கு ஆபீஸ் வேணும்னு கேட்டா!

எஸ்.கணேசன், திருச்சி - 23.

• கிரேஸி மோக

• கோவி.மணிசேகரன்

**கோ**வி. மணிசேகரன் எழுதிய நான்கு இசைகள் நாடகம். சிறிய உட்பூசலுக்குப் பின் தவறு மன்னிக்கப்பட்டு குடும்பம் ஒன்று சேர, அண்ணியாக வந்த பானுமதி கூறுகிறார்: "எதையும் மன்னிக்கிறவ தாய்; இதைத்தான் மன்னிப்பது என்று உணர்ந்து மன்னிக்கிறவனே தகப்பன்"- தாய் தந்தை பற்றிய புதிய definition கேட்டு இரு ஆண்டுகள் ஆகியும் மறக்க முடியாதது.

ராதா ஸ்ரீதர், சென்னை - 78

**ஒ**ரு நம்பிக்கை இல்லாத சிறுவனும் ஒரு தன்னம்பிக்கையான சிறுவனும் கன்யாகுமரி முனையில் சந்தித்துக் கொள்கிறார்கள். ஒருவன் கடலின் முனையில் மற்றொருவனை நிற்கவைத்து "இந்த இடத்துடன் இந்தியா முடிந்து விடுகிறது" என்கிறான். தன்னம்பிக்கைச் சிறுவனோ அவனை திருப்பி நிற்க வைத்து, "இந்த இடத்தில்தான் இந்தியா ஆரம்பிக்கிறது என்றும் வைத்துக் கொள்ளலாமே" என்கிறான். ஹிந்தி சீரியலின் பெயர் மறந்து விட்டாலும் சூப்பர் என சொல்ல வைத்தது.

ஷோபா சப்தரிஷி, ஹோசூர்.

"**ஓ**ய்வு" நாடகத்தில் தன்னை மதிக்காத மகன், மருமகன் பற்றி மிகவும் குறை கூறும் மாமனாருக்கு அவருடைய நண்பர் கூறும் கீழ்க் கண்ட ஆறுதல் வரிகள் 'சூப்பர்! "குழந்தைக்கு அப்பா போல கண்; அம்மா போல மூக்கு என்று கூறுகிறோமே, அதுபோல பிள்ளைகளின் குணம் மட்டும் எங்கிருந்து வருகிறது? பிள்ளைகள் நிர்மூலமாக இருந்தால் அதற்கு மூலம், நாம்தானே? நாமும் கொஞ்சம் விட்டுத்தான் கொடுக்க வேண்டும்!"

எஸ்.கீதா, மேட்டூர் அணை.

## மோட்டார் சைக்கிள் பரிசுத் திட்டம்!

### போட்டி — 3

**அ**ருகிலுள்ள படத்தை வரைந்தவர் நீங்கள் நினைப்பது போல் ஓவியர் ஜெயராஜ் அல்ல. வேறொரு பிரபல ஓவியர்தான் ஜெயராஜ்போல் வரைந்திருக்கிறார். அந்த பிரபல ஓவியர் யார் என்பதைக் கீழுள்ள கூப்பனில் குறித்து வைத்துக் கொள்ளுங்கள். 26 போட்டிகளில் யார் அதிகப் போட்டிகளில் கலந்து கொண்டு அதிக வெற்றி பெறுகிறாரோ அவருக்கே மோட்டார் சைக்கிள் பரிசு! 26 கூப்பன்களையும் மொத்தமாக அனுப்ப வேண்டியது அவசியம் என்பதால் கூப்பன்களைப் பத்திரப் படுத்தி வையுங்கள். ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.



படத்தை வரைந்த ஓவியர்:....................................

என் பெயர் : ....................................

முகவரி : ....................................

....................................

....................................

We accept
Fixed Deposits
at the rate of
24%
with incentives.

# நீங்கள் சொந்த வீடு வாங்க இதுவே சரியான நேரம்

காசி குரூப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீமின் வெற்றிகரமான 14-வது குலுக்கல் 30.10.94 அன்று காசி திரையரங்கு வளாகத்தில் பிரபல திரைப்பட நட்சத்திரங்களின் முன்னிலையில் நடைபெற உள்ளது.

இத் திட்டத்தில் புதிதாக வழங்கப்பட்ட GIFT CARD குலுக்கல் மூலம் உறுப்பினர்களை தேர்ந்தெடுத்து கவர்ச்சிகரமான சிறப்புப் பரிசுகள் வழங்கப்பட்டன.

இத் திட்டத்தில் ரூ. 1,250/- முதல் ரூ. 5,000/- வரை மாதத் தவணைகளாகச் செலுத்தி குலுக்கல் மூலம் 277 முதல் 1111 சதுர அடிகள் வரை உள்ள வீடுகளைத் தேர்ந்தெடுத்து சொந்த வீடாக்கிக் கொள்ளலாம். மீதித் தொகையை சொந்த வீட்டிலிருந்து கொண்டே வாடகை போல செலுத்தலாம். இத் திட்டத்தில் சேருபவர்கள் அனைவருக்கும் ரூ. 300/- முதல் ரூ. 1,000/- வரை ஒவ்வொரு கவர்ச்சிகரமான பரிசுகள் வழங்கப்படும்.

**சுபமங்களா திட்டம் :**

இத் திட்டத்தில் உடன் குடிபுகத் தயாரான நிலையில் உள்ள வீடுகளின் மொத்த விலையில் ரூ. 10,000/- மட்டுமே செலுத்தி உடனே சொந்த வீட்டில் குடியேறலாம். மீதித் தொகைக்கு நாங்கள் கடன் உதவி ஏற்பாடு செய்து தருகிறோம். இத் திட்டத்தில் வீடு பதிவு செய்பவர்கள் அனைவருக்கும் ரூ. 1,000/- மதிப்புள்ள கவர்ச்சிகரமான பரிசுகள் வழங்கப்படும்.

**வீடு கிடைக்கும் இடங்கள் :**

சென்னை கே. கே. நகர் மேற்கு, விருகம்பாக்கம், வளசரவாக்கம், சாலிகிராமம், வடபழனி, குமரன் காலனி, கில் நகர் போன்ற இடங்களில் வீடுகள் கட்டித் தருகிறோம்.

**ஒரு சதுர அடியின் விலை ரூ. 450/- மட்டுமே!**

**FIXED DEPOSITS :**

நீங்கள் முதலீடு செய்யும் வைப்பு நிதித் தொகைக்கு 24% வட்டியுடன் ஊக்கப் பரிசுகளும் வழங்கப்படுகிறது. மேலும் கூட்டு வட்டி வைப்பு நிதியில் நீங்கள் முதலீடு செய்யும் தொகை 3½ ஆண்டுகளில் இரட்டிப்பாகிறது.

மேலும் விவரங்களுக்கு :

**காசி ஹவுசிங் & டெவலப்மென்ட் லிமிடெட்**

மற்றும்

**காசி பில்டர்ஸ்**

காசி தியேட்டர் காம்ப்ளக்ஸ்,
91, 92 ஜவாஹர்லால் நேரு சாலை, அசோக் நகர், சென்னை - 600 095.
போன் : 4821969, 4822206 ஞாயிறு முழு நேரம் அலுவலகம் உண்டு.
FAX : 044-4821897

இருபது வயது இளமை உடலெங்கும் பூரிப்பாய் தன் முத்திரைகளைப் பதித்திருக்க, துள்ளுகின்ற மீன் விழிகளுக்குச் சாமரம் வீசும் இமைகளும், தம் கட்டும் நாயனக்காரரின் கும்மென்ற கன்னங்களும், நுணுக்கமாகச் செதுக்கின சின்ன உதடுகளும், அலையாய் நெளி நெளிந்து பரவும் கூந்தலும், சீவின தந்தமாக மின்னும் நரம்பு தெரியாக் கழுத்தும், படைத்த பிரம்மனையே நின்று திரும்பிப் பார்க்கச் சொல்லும் கடைசல் தேகமும் அமையப் பெற்றிருந்த அழகான தேவதை மங்கை ராதிகா -

செத்துப் போயிருந்தாள்.

விடிய சகுனம் பார்த்துக் கொண்டிருந்தது வானம். கரைந்து விலகத் தீர்மானித்த பனி, பிரிவு முத்தங்களை ஈரப் புள்ளிகளாக மலர்களின் மேல், இலைகளின் மேல் வைத்துக் கொண்டிருந்தது.

தடதடவென்று மோட்டார் பைக்கில் வந்த வெங்கட் அதை ஸ்டான்ட் போட்டு நிறுத்தியபடியே, "சித்தப்பா" என்று ஒரு விம்மலுடன் கத்தினான்.

தொட்டிச் செடிகளுக்குப் பூவாளி மூலம் தண்ணீர் ஊற்றிக் கொண்டிருந்த, அழைக்கப் பட்ட சித்தப்பா திடுக்கிட்டுப் போய்த் திரும்பினார்.

லுங்கியும், சட்டையும் அணிந்து, கலைந்த தலையுடன் அழுத முகத்துடன் தன்னை நோக்கி ஓடி வந்து, "சித்தப்பா, சித்தப்பா..." என்று மட்டும் சொல்லி, தன் கைகளில் முகம் புதைத்து விம்மி அழுகின்ற வெங்கட்டைப் பார்த்துப் பதறிப் போனார்.

"வெங்கட், என்ன இது? என்னப்பா ஆச்சு?"

அவனால் பேச முடியவில்லை. திமிறிக் கொண்டு பீறிட்ட அழுகை அவனைப் பேச விடவில்லை.

அவனைத் தன் மார்போடு சாய்த்து, "பதறாதே வெங்கட்.. என்னன்னு சொல்லு" என்றார் நரைத்த மீசை சித்தப்பா.

"ராதிகா... ராதிகா..." என்றான்.

"ராதிகாவுக்கு என்ன?"

"வாங்க சித்தப்பா! எனக்கு எதுவுமே புரியலை. ராதிகா ஏன் இப்படி செய்தான்னு தெரியலை. வாங்க சித்தப்பா. என்னோட வாங்க!"

"இரு வெங்கட்! இந்த நிலைமையில நீ பைக் ஓட்ட வேணாம். என்னோட கார்ல வா."

சித்தப்பா பங்களாவுக்குள் ஓடி, காரின் சாவியோடு திரும்பினார். போர்ட்டிகோவில் நின்றிருந்த அம்பாஸிடரில் அணிந்திருந்த நைட் கவுனுடன் அப்படியே ஏறினார். வெங்கட் அவர் அருகில் அமர்ந்து கொண்டதும் புறப்பட்டார்.

ஓட்டியபடி கேட்டார், "நீ பெங்களூர் போறதா சொன்னியே, எப்ப வந்தே?"

"இன்னிக்கு அதிகாலையில ரெண்டு மணிக்குத்தான் வந்தேன்."

"எதில வந்தே?"

"ஃப்ளைட்ல" என்றான் மூக்கை உறிஞ்சியபடி.

"நாளைக்குத்தானே வர்றதா இருந்தே?"

"ஆமாம். போன வேலை முடிஞ்சுடுச்சு. அதனால புறப்பட்டேன். நைட் எட்டு மணிக்கு மெட்ராஸ் வந்து சேர வேண்டிய ஃப்ளைட்டு, பாதி வழில எந்திரக் கோளாறுல மறுபடி பெங்களூர் திருப்பிட்டாங்க. அப்புறம் அதை சரி செஞ்சி மறுபடி புறப்பட்டு ஒன்றரை மணிக்குக் கொண்டாந்து விட்டாங்க. வீட்டுக்கு வந்தப்போ ரெண்டாய்டுச்சி" என்றுச் சொல்லி முடிப்பதற்குள் நான்கு முறை தடுக்கியது.

"சரி, ராதிகாவுக்கு என்னடா?"

ராதிகாவைப் பற்றிக் கேட்டதுமே அழத் துவங்கி விட்டான்.

# இமைக்காத இரவு...

"காலைல முழிப்பு வந்தப்ப கட்டில்ல அவளைக் காணோம். குரல் கொடுத்தேன். பதில் இல்லை. பாத்ரூம் கதவு திறந்திருந்திச்சு. ஹாலுக்கு வந்து பார்த்தேன். காணோம். சமையலறையில் இல்லை. வாசக்கதவு உள் பக்கம் தாழ் போட்டிருக்கு. எனக்கு ஒரே ஆச்சரியமாப் போயிடுச்சி.





1



மாடியில நாங்க அதிகம் புழங்காம, கெஸ்ட் வந்தா மட்டும் தங்க வைக்கிற ரூமுக்கு வந்து பார்த்தா...." முடிக்க முடியாமல் மீண்டும் அழத் துவங்கி விட்டான்.

சித்தப்பாவுக்கு ஏதோ புரிந்தது. புரிந்தது அதிர்ச்சி தந்தது.

"சேலையை உருவி ஃபேன்ல மாட்டி தூக்கு மாட்டிக்கிட்டுத் தொங்கறா சித்தப்பா!" என்றவன் தன் மார்பில் அடித்துக் கொள்ளத் துவங்கினான், "எனக்கு எதுவுமே புரியலை. எதுவும் புரியலை."

விக்கித்துப் போனார் சித்தப்பா.

வெங்கட்டின் வீடு வந்து விட்டது. காரை நிறுத்தினார். வெங்கட் தடுமாறி இறங்கினான். சாவி போட்டு வீட்டின் கதவைத் திறந்தான்.

"போய்ப் பாருங்க! அந்தக் கன்றாவியைப் பாருங்க" என்று முகத்தில் அறைந்து கொண்டு அழுது சோபாவில் விழுந்து விட்டான்.

சித்தப்பா கலக்கமாகப் படிகள் ஏறி மாடிக்கு வந்தார்.

அந்த அறையின் இரட்டைக் கதவுகள் விரியத் திறந்திருக்க, உள்ளே மின்விசிறியிலிருந்து தொங்கின புடைவை முனையில் ராதிகா தொங்கிக் கொண்டிருந்தாள்.

நாக்கு வெளித் தள்ளி, விழிகள் பாதி பிதுங்கி... கோரம்! மகா கோரம்! அவள் காலடியில் அவளால் உதைத்துத் தள்ளப் பட்ட மரத்தாலான ஸ்டூல் ஒன்று கிடந்தது.

அதிர்ச்சியில் அவருக்கு மார்பு வலித்தது. வலித்த மார்பைப் பிடித்துக் கொண்டு இறங்கி வந்தார்.

அழுது கொண்டிருந்தவனைத் தொட்டார். கலங்கின கண்களுடன் குரலடைக்க, "என்னடா இதெல்லாம்? ஏன்டா இப்படி?" என்றார்.

தன் சட்டைப் பையிலிருந்து நான்காக மடிக்கப்பட்ட கடிதம் ஒன்றை எடுத்து நீட்டினான்.

"அவ ஜாக்கெட்ல இதைச் செருகி வைச்சிருந்தா சித்தப்பா!"



**அடுத்த இதழில்....**

**•• பதவி இழப்பாரா வாழப்பாடி?**
- சிறப்புக் கட்டுரை

**•• சேலை உடுத்துவது வசதியா இல்லையா?**
- பெண்களின் கருத்து

விரித்துப் படித்தார்.

'அன்புக் கணவருக்கு,

ராதிகா எழுதியது. நீங்கள் ஊரில் இல்லாதபோது அந்த ராட்சச வலி மீண்டும் வந்தது. இரண்டு மணி நேரம் துடித்துப் போனேன். டாக்டர் கொடுத்த மருந்தைச் சாப்பிட்டு, கந்த சஷ்டிக் கவசம் சொல்லச் சொல்ல வலி குறைந்தது. ஆனால் அந்த இரண்டு மணி நேரம் துடித்த துடிப்பு! எனக்கு ஆபரேஷன் செய்து கொள்ள விருப்பம் இல்லை. பயம், ஆனால் அடிக்கடி என்னை நோகடிக்கும் இந்த வலியை நான் வென்றாக வேண்டும். இதற்கு நிரந்தரமான தீர்வு என் உயிரைப் போக்கிக் கொள்வது தான். ஒரு வியாதி பிடித்த மனைவியோடு நீங்களும் எத்தனை நாட்களுக்குத்தான் போராடுவீர்கள்? நீங்கள் ஒரு நல்ல பெண்ணாய்ப் பார்த்து, மறுபடி திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்பதே என் கடைசி ஆசை. உங்களை விட்டுப் போகிறேன். என் சாவுக்கு நானே காரணம். என்னைத் தயவு செய்து மன்னித்து விடுங்கள்.

இப்படிக்கு,
ராதிகா.

"அவ உடம்புக்கு என்னடா பிரச்னை?" என்றார் கடிதத்தைப் படித்து முடித்த சித்தப்பா.

"அடிக்கடி வயத்து வலில துடிப்பா சித்தப்பா. சாதாரண டாக்டர் கிட்டே போனதுக்கு வயத்தில் புண் இருக்குன்னு சொல்லி ட்ரீட்மெண்ட் கொடுத்தார். அப்படியும் சரியாகலை. அப்புறம் பெரிய ஸ்பெஷலிஸ்ட் கிட்டே அழைச்சுட்டுப் போனேன். அவர் கம்ப்ளீட்டா ஸ்கேன் பண்ணிட்டு, கர்ப்பப் பையில கட்டி இருக்குன்னுட்டார். காம்ப்ளி கேட்டடா இருக்கு, ஆபரேட் பண்ணி கர்ப்பப் பையையே அப்புறப்படுத்தனும்னு சொல்லிட்டார். இவ ஆபரேஷனுக்கு சம்மதிக்கலை, 'வாழ்க்கை பூரா மலடியா இருக்க முடியாது, நான் கும்புடற முருகன் ஆபரேஷன் எதுவும் இல்லாமலே எனக்குச் சரி செஞ்சிடுவான்'னு சொல்லிட்டு பக்தியையும், பிரார்த்தனையையும் இறங்கிட்டா. ஒரு குழந்தையை மனப்பூர்வமா தத்து எடுத்துக்கலாம்னு எவ்வளவோ சொன்னேன். வற்புறுத்தி ரெண்டு அனாதை இல்லங்களுக்கு அழைச்சிட்டுப் போயி குழந்தைகளைக் காட்டினேன். அவளை ஆபரேஷன் செய்துக்கச் சொல்லி வற்புறுத்தினேன், பல தடவை. அவ பிடிவாதமா ஒத்துக்கவே இல்லை. இப்படி இன்னிக்கு முட்டாள் தனமா முடிவெடுத்து என்னைத் தவிக்க விட்டுட்டுப் போயிட்டாளே சித்தப்பா! நான் என்ன பண்ணுவேன் சித்தப்பா! என்ன பண்ணுவேன்!"

வெங்கட் மீண்டும் அழத் துவங்கினான்.

"வெங்கட், என்ன அழுது புலம்பி என்ன ஆகப் போகுது. அறிவு கெட்டதனமா ஒரு முடிவெடுத்து அவ போய்ச் சேர்ந்துட்டா. இப்போ ஆக வேண்டியதைப் பார்க்கலாம். நீ அமைதியா உக்காரு. எல்லாம் நான் பார்த்துக்கறேன். உன் மாமனார் வீட்டுக்குப் போன் செஞ்சியா?" என்றார்.

"எனக்கு எதுவுமே தோணலை. பைத்தியம் பிடிச்ச மாதிரி ஆயிடுச்சி. உங்க வீட்டுக்கு எப்படி வந்து சேர்ந்தேன்னே எனக்குப் புரியலை."

"கொஞ்சம் பதற்றப்படாம உக்காரு சொல்றேன். திண்டிவனம் நம்பர் என்ன சொல்லு."

அவன் சொல்ல, அவர் அங்கிருந்த டெலிபோனை எடுத்து எண்களைத் தொட்டார்.

"ஹலோ, நான் மெட்ராஸ்லேர்ந்து வெங்கட்டோட சித்தப்பா அருணகிரி பேசறேன். சம்பந்தியா பேசறது?"

"ஆமாம். என்ன சொல்லுங்க?"

"வந்து... இப்ப நான் உங்க பொண்ணு வீட்லேர்ந்துதான் பேசறேன். நீங்க குடும்பத்தோட உடனே புறப்பட்டு வாங்க."

"என்ன? என்ன விஷயம்?"

"அதிர்ச்சியடையாதீங்க. எப்படிச் சொல்றதுன்னு புரியலை. உங்க பொண்ணுக்கு உடம்பு சரியில்லை. ரொம்ப சீரியஸா இருக்கு. தாமதிக்காம உடனே புறப்பட்டு வாங்க. நேர்ல பேசிக்கலாம்" என்று வைத்து விட்டார்.

தலையைப் பிடித்துக் கொண்டு அழுது கொண்டிருந்த வெங்கட்டைப் பார்த்தார். மனதைப் பிசைந்தது.

"வெங்கட், தற்கொலை போலீஸ் கேஸ்.

அவங்களுக்குத் தகவல் சொல்லாம விட்டா பெரிய தப்பாயிடும். தெரிவிச்சிடறேன்."

"ஆபரேஷன் வேணாம்னுதான் அவ தூக்கு மாட்டிக்கிட்டா, அவங்க உடம்பைக் கூறு போடுவாங்களே சித்தப்பா."

"அதுக்கு என்னப்பா செய்யறது? இன்ஸ்பெக்டர் தங்கமுத்து எனக்குத் தெரிஞ்சவர்தான். தெளிவா லெட்டர் எழுதி வெச்சிருக்கிறதாலே போஸ்ட் மார்ட்டம் செய்யாம உடம்பைக் கொடுக்க முடியுமான்னு கேப்போம். சொல்லாம மறைக்கிற விஷயமில்லை இது."

"எது சரியோ அப்படிச் செய்யுங்க சித்தப்பா."

அவர் அடுத்து ஏரியா போலீஸ் ஸ்டேஷனின் எண்ணை முயன்று, "அங்கே இன்ஸ்பெக்டர் தங்கமுத்து இருக்காரா?" என்றார்.

"நான் தங்கமுத்துதான் பேசறேன்."

"சார், நான் அருணகிரி பேசறேன். குட் மார்னிங்."

"குட் மார்னிங், சொல்லுங்க சார்."

"என் அண்ணன் பையன் வெங்கட்னு 'சில்வர் ஸ்டார் எக்ஸ்போர்ட்ஸ்' கம்பெனில அசிஸ்டெண்ட் மேனேஜரா இருக்கான். இப்ப நான் அவன் வீட்டிலேர்ந்துதான் பேசறேன். இங்கே அவன் வொய்ஃப் இன்னிக்குக் காலையில திடீர்னு தூக்கு மாட்டி தற்கொல பண்ணிட்டிருக்கா, அட்ரஸ் சொல்றேன், கொஞ்சம் புறப்பட்டு வாங்க."

"சொல்லுங்க சார்."

இவர் விலாசம் சொல்லி, குறித்துக் கொள்ளப்பட்டதும்—

"நீங்க அங்கேயே இருக்கீங்களா சார்?"

"கண்டிப்பா. அவனுக்கு மெட்ராஸ்ல வேற யாரும் இல்லை. நான் இங்கேயே இருக்கேன்" என்றார் அருணகிரி.

பிறகு வெங்கட்டின் மற்ற உறவினர்களுக்கெல்லாம் போன் செய்யத் துவங்கினார்.

அரை மணி நேரத்தில் கான்ஸ்டபிள்களோடு வந்து சேர்ந்தார் தங்கமுத்து. அருணகிரி அவருக்கு வெங்கட்டை அறிமுகப் படுத்தி வைத்து விட்டு மாடிக்கு அழைத்துச் சென்றார்.

இன்ஸ்பெக்டர் தங்கமுத்து தொங்கிக் கொண்டிருக்கும் ராதிகாவின் உடலைப் பார்த்ததும், அவர் முதல் பார்வை தரையிலிருந்து சற்று உயரத்தில் தொங்கின அவள் கால்களில் நிலைத்தது.

அருகில் சரிந்து கிடந்த ஸ்டூலின் உயரத்தை அவர் பார்வை மனதிற்குள் அளக்கத் துவங்கியது.

(தொடரும்)












ESTD : 1955 ஸ்ரீ PHONE : 24823

## தீபாவளி கங்கா ஸ்நானமும்
## தங்க அன்னபூர்ணா தேவி தரிசனமும் கூடிய
### 19 நாட்கள் கொண்ட காசி யாத்திரை.

சென்னையிலிருந்து, 24.10.94 & 27.10.94 ம் தேதிகளில் புறப்பட்டு கல்கத்தா-கயா காசி-அயோத்யா-அலகாபாத்-அரித்வார்-ரிஷிகேஷ்-லக்ஷ்மண ஜுலா-டில்லி, ஆக்ரா-மதுரா-சென்னை வந்து சேர்கிறது. இந்த யாத்திரைக்கு ஒரு தனி 3 டயர் கோச் ரிசர்வ் செய்துள்ளோம். கட்டணம் நபருக்கு ரூ. 4575/-. ரூ. 1500 வீதம் அட்வான்ஸ் அனுப்பி ரிசர்வ் செய்து கொள்ள வேண்டும்.

ஆண்டுதோறும் நம் இந்திய நாட்டில் உள்ள பல்வேறு மொழிகளையும், கலாச்சாரங்களையும் பழக்க வழக்கங்களையும் கொண்ட மதத்தவர்களால் கொண்டாடப்படுவது தீபாவளி நாளாகும். இந்த திருநாளில் இல்லங்களில் உள்ளவர்கள் அனைவரும் அவரவர் சக்திக்கேற்றபடி கொண்டாடுவது வழக்கமாகும். தீபாவளி திருநாள் அன்று ஆதவன் உதிக்கும் முன்னர் ஸ்நானம் செய்து புத்தாடை அணிந்து இறை வழிபாட்டிற்கு பின்னர் ஒருவரை ஒருவர் சந்திக்கும் போது நமஸ்காரம்! என்ன கங்கா ஸ்நானம் ஆச்சா? என்றுதான் விசாரிப்பார்கள். கங்கா ஸ்நானம் என்பது வெந்நீரிலோ அல்லது குழாய் நீரிலோ ஸ்நானம் செய்தாலும் கங்கா ஸ்நானம் ஆச்சு என்றே பதில் வரும். அப்போதே நமக்குத் தோன்றும் எண்ணம் என்ன தெரியுமா? சரியா! என்றைக்காவது ஒருநாள் அந்த காசி கங்கையிலே ஸ்நானம் செய்யும் வாய்ப்பை அடைவோமா என்ற எண்ணம்தான். ஆம்! அந்த எண்ணம் நிறைவேறவே ஏற்பாடு செய்யப்பட்டுள்ள யாத்திரை.

இந்த யாத்திரையில் தஞ்சை திரு G. லட்சுமிகாந்தன் (D.R.O. Rtd) விஜயா தம்பதியரும், சென்னை பாடி திருமதி செல்லம்மாள் வெங்கடேசன், அனுசுயா, காமடி சிருங்கேரி சங்கர மடம் திரு R.S. தீக்கர், அமிஞ்சிமங்கலம், மி. தனபாக்கியம், கோஷ்டியார் 20 அன்பர்களுடன் ஸ்ரீலங்கா வைத்தியலிங்கம் சுப்ரமணியம், வடலூர் திருமதி. எ. செல்லம், திருமதி. வி. ராஜேஸ்வரி, திருமதி. என். பர்வதம் சேர்ந்துள்ளனர்.

முழு விபரங்கள் வேண்டுவோர் ரூ. 2 ஸ்டாம்புடன் எழுதுவது நலம்.
அல்லது நேரில் வருவது உத்தமம்.



## ஸ்ரீ நாமகிரி டிராவெல் சர்வீஸ்

34-A/2 அக்ரஹாரம் மேல சிந்தாமணி, திருச்சி - 2. (K.E. நம்பிள்ளை N. ஸ்ரீதர் N. குலசேகர்)

---

கேட்டறியுங்கள் உங்கள் புதிய

## ஜாதகபலன் ஜோதிட போன்

இந்த வாரபலன்கள்

**0011 222 222 0+☐☐**

மேலே கொடுத்துள்ள பதினொரு எண்களையும் டயல் செய்வதுடன் உங்கள் சூரிய ராசிக்குக் கொடுத்துள்ள இரண்டு எண்களையும் டயல் செய்யவும்.

| 31 | 32 | 33 | 34 | 35 | 36 |
|---|---|---|---|---|---|
| மேஷம் | ரிஷபம் | மிதுனம் | கடகம் | சிம்மம் | கன்னி |

| 37 | 38 | 39 | 40 | 41 | 42 |
|---|---|---|---|---|---|
| துலாம் | விருச்சிகம் | தனுசு | மகரம் | கும்பம் | மீனம் |

### மன ஜோதிடம்

உங்கள் வருங்கால ரகசியங்களை அறிந்திடுங்கள்

☎ 0011 222 222 030

### பொருத்தம்

உங்கள் அன்பும் நீங்களும் ஒருவருக்கொருவர் பொருத்தமானவர்களா? என்று தெரிந்து கொள்ளுங்கள்

0011 222 222 043

### பட்சி சாஸ்திரம்

ஒரு பண்டைய ஆருட முறை உங்கள் குறிப்பிட்ட கேள்விகளுக்கு பதில் சொல்கிறது.

☎ 0011 222 222 025

இது சர்வதேச போன் கால். அங்கீகரிக்கப்பட்ட கட்டணங்கள். எம் & ஏ. யு.எஸ்.ஏ.

# பாலம்

●● கர்னால் மற்றும் அதனைச் சார்ந்துள்ள பகுதிகளில் வாழும் தமிழ் பேசும் மக்களை ஒருங்கிணைக்கும் நோக்குடன் கர்னால் நகரில் தமிழ்ச் சங்கம் தொடங்கப் படுகிறது. தேசிய பால் வள ஆராய்ச்சி நிறுவனத்தில் கல்வி கற்க வரும் மாணவர்களுக்கும் இதர பணி நிமித்தமாகக கர்னாலில் குடியேறும் தமிழ் மக்களுக்கும் இட வசதி மற்றும் அனைத்து வசதிகளும் பெற ஆலோசனைகள் தந்து உதவும்.

கர்னால் தமிழ்ச் சங்கம்
மனை எண் 1746,
செக்டார் 13,
கர்னால் – 132 001

●● திருச்சியிலிருந்து வெளியாகும் தமிழ் நாளிதழ் ஒன்றில் பணிபுரியும் இளைஞர் ஒருவருக்கு ஆங்கிலத்திலிருந்து கதை, கட்டுரை, மற்றும் செய்திகளைத் தமிழில் மொழி பெயர்க்கப் பயிற்சி அளிக்கப் பேராசிரியர்களோ அல்லது மொழி பெயர்ப்பு வல்லுனர்களோ தேவை. ஓய்வு நேரத்தில் பயிற்சி அளித்தால் போதும். தக்க ஊதியம் வழங்கப்படும்.

பொ. ஜெயபாலன்,
61, மாமுண்டிசாமி கோயில் தெரு, ஆனந்தபுரம்,
திருச்சி – 620 008.

●● எனது சொந்த ஊரில் நன்னீர் மீன் வளர்ப்புச் செய்ய எண்ணுகிறேன். தொட்டி அமைப்பு, உணவு வகை, பராமரிப்பு முறை ஆகியவை குறித்து அனுபவ அறிவு உள்ளவர்கள் விவரங்கள் கொடுத்து உதவ வேண்டுகிறேன். இது தொடர்பான புத்தகம், உபகரணங்கள் கிடைக்குமிடமும் தெரிவிக்கவும்.

எம்.பிச்சைபிள்ளை,
**Pass port office,**
**12-2-83, Asif Nagar,**
**Hyderabad - 28.**

●● முப்பத்தைந்து வருஷங்களாக ஐயப்பன் உள்பட எல்லா விக்ரகங்களும் வைத்து பூஜை செய்து வருகிறேன். ஆஸ்திக அன்பர்கள் யாராவது அபிஷேகத்துக்குச் சிறிய வலம்புரிச் சங்கு இருந்தால் இலவசமாக அனுப்பி உதவுமாறு வேண்டுகிறேன்.

எஸ். வேணுகோபாலய்யப்பன்.
15, 8வது தெரு,
தசரதபுரம், சாலிக்கிராமம்,
சென்னை – 600 093.

●● தொழிற்சாலை உபயோகத்துக்குத் தோல் கையுறைகள் மற்றும் பாதுகாப்பு சாதனங்கள் தயாரித்து விற்பனை செய்கிறேன். இந்தத் தொழிலை மேலும் விரிவு படுத்தவும் மற்ற தோல் பொருள்கள் தயாரிக்கவும் மூலதனம் தேவை. முப்பது முதல் நாற்பது சதம் வரை லாபம் கிடைக்கும். பார்ட்னராகவும் சேரலாம்.

எம்.ஏ. பால்ராஜன்,
எம்.ஜி.எம். இன்டஸ்ட்ரீஸ்,
6, தாதா சாகிப் காம்ப்ளெக்ஸ்,
தஞ்சாவூர் மெயின் ரோடு,
திருவெறும்பூர்,
திருச்சி – 620 013.

●● புல்லெட் மோட்டார் சைக்கிள் வைத்திருக்கிறேன். யாராவது "ஸ்பான்சர்" செய்தால் "ராலி" களில் கலந்து கொண்டு என் திறமையை நிரூபிப்பேன். ஸ்பெஷலிஸ்ட் மெகானிக் உள்ளார். என்னை ஊக்குவிக்கவும்.

எஸ்.மகேஷ்குமார்,
18, மூர்த்தி நகர்,
வில்லிவாக்கம்,
சென்னை – 49.

●● சிட்டகாங் வீராங்கனை கல்பனா தத் எழுதிய REMINISENCES என்ற புத்தகம் யாரிடமாவது இருந்தால் அனுப்பி வைக்கவும். அதற்குரிய விலை தரத் தயாராயிருக்கிறேன்.

நெல்லை எஸ்.வேலாயுதம்,
58, ராம் நகர் 3வது தெரு,
எஸ்.எஸ்.காலனி,
மதுரை – 625 016.

●● மினரல் வாட்டர் தயாரிப்புத் தொழிலில் ஈடுபட எண்ணம் உள்ளது. தொழில் நுட்பம் தெரிந்தோர் தொடர்பு கொண்டு உதவ வேண்டுகிறேன்.

எஸ். முருகேசன்,
ஏ.ஆர். தோட்டம்,
மெயின்ரோடு, திருப்பழனம்,
திருவையாறு வட்டம்,
613 204

●● கோவை பாரதியார் பல்கலை கழகத்தில் அஞ்சல் வழி கல்வி பயிலும் எனக்கு இளம் வணிகவியலின் இரண்டாம் ஆண்டுக்கான தமிழ்வழி பாடப் புத்தகங்கள் தேவை. உதவக் கூடியவர்கள் தொடர்பு கொள்ளவும்.

நா.சண்முகவேல்,
690, மாரியம்மன் கோயில் வீதி,பழையூர்,
பாப்பநாயகன்பாளையம்,
கோயமுத்தூர் – 641 037.

●● எனக்குத் தெரிந்த கைத் தொழில்களான மணி வேலைப் பாடுகள், பெயின்டிங், புக் பைண்டிங், மெஹந்தி இடுதல் போன்றவற்றைக் கற்றுத்தர விருப்பம். ஆர்வமுள்ளவர்கள் வரலாம்.

ஆர்.நந்தினி,
13, விசுவநாதன் தெரு,
ராதா நகர், குரோம்பேட்டை
சென்னை — 600 044.

(பாலம் மூலம் இணைகின்ற வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி காரியாலயம் பொறுப்பு ஏற்க இயலாது. -ஆர்)



அனுபவ் தேக்குத் தோட்டங்களின் ஒரு தோற்றம்... 15 மாதங்களுக்கு முன்பு

# கண்ணால் காண்பதே மெ

## உங்களுடைய ரூ.36 லட்சம் வளர்ந்து வருவதை இப்போது காணலா

போடிநாயக்கனூரில் உள்ள தேக்குப் பண்ணையில் முதன் முதலா தேக்குக் கன்றுகளை அனுபவ் நட்டு 15 மாதங்களே ஆகின்றன.

சீரான நீர்ப்பாசனத்தாலும், பயிற்சி பெற்ற தோட்டக்கலை வல்லுநர்களின் மிக உயர்ந்த தொழில் நுட்ப மேற்பார்வையினாலு இங்குள்ள நிலப் பகுதி பிரமிக்கத்தக்க வகையில் மாறிவிட்டது.

இன்று, வரிசை வரிசையாகத் தேக்கு மரங்கள் 6.08 மீட்டர் (20 அ உயரத்திற்கு நெடிது உயர்ந்து வளர்ந்திருக்கின்றன.

சாதாரணமாக இதற்கு 3 ஆண்டுக் காலம் தேவைப்படும்.... ஆனா 15 மாதங்களிலேயே இந்த விரைவான வளர்ச்சியைக் கண்டிருக்கிறது அனுபவ்.

இந்த மாபெரும் வளர்ச்சியால் தேக்குப் பண்ணை உரிமையாளர்களுக்கு ரூ.18 லட்சம் முதல் ரூ.4.6 கோடி வரை வருமானம் கிடைக்கவிருக்கிறது

## நீங்கள் எப்பொழுது அனுபவ் தேக்குப் பண்ணை உரிமையாளராகப் போகிறீர்கள்?




| திட்டம் | முதலீட்டுத் தொகை ஒரே தவணையில் செலுத்தினால் ரூ. | நிலம் ச.மீ. | 20 வருடங்களுக்குப் பிறகு உத்திரவாதமான தேக்கு மரம் க.மீ. | 20 வருடங்களுக்குப் பிறகு கணிக்கப்பட்ட மதிப்பு* ரூ. |
|---|---|---|---|---|
| அ | 28,800 | 334 | 40.8 | 36 லட்சம் |
| ஆ | 14,400 | 167 | 20.4 | 18 லட்சம் |
| இ | 80,000 | 1,003 | 124.6 | 1.10 கோடி |
| ஈ | 1,60,000 | 2,006 | 254.8 | 2.25 கோடி |
| உ | 3,20,000 | 4,013 | 521.0 | 4.60 கோடி |

குறிப்பு: இடைக்கால வருமானங்கள், முதலீடு ரத்து விருப்பத் தேர்வு மற்றும் ஓர் எளிய தவணைத் திட்டம் ஆகியவை இந்தத் திட்டங்களின் கவர்ச்சிகரமான கூடுதல் சிறப்பு அம்சங்களாகும்.

*கனமீட்டர் ஒன்றுக்கு ரூ.88,321 என்று குறைந்த தோராயத்தில் மதிப்பிடப்பட்ட தேக்கு விற்பனையின் அடிப்படையிலானது

அனுபவ் தேக்குத்
தோட்டங்களின்
ஒரு தோற்றம்...
இப்போது!



## அனுபவ் பிளாண்ட்டேஷன்ஸ் லிட்.,

11, சோமசுந்தரம் தெரு, தி.நகர், சென்னை – 600 017.
தொலைபேசி : 8283316, 8254155, 8282833, 8282629. ஃபேக்ஸ் : 044 – 8284967.

கிளைகள் : 23, கஸ்தூரி ரங்கா ரோடு, ஆழ்வார்பேட்டை, சென்னை – 600 018. போன் : 4990344. பி.ஆர். காம்ப்ளக்ஸ், இரண்டாவது மாடி, 12, ராமகிருஷ்ணா சாலை, தாம்பரம், சென்னை – 600 056. 119, மேற்கு பெருமாள் மேஸ்திரி தெரு, இரண்டாவது மாடி, மதுரை-625 001. ஜெனனி பிளாசா, ஷாப் நெம். 9, (கீழ்தளம்) 5, பாரதியார் சாலை, திருச்சி 620 001. சிவா காம்ப்ளக்ஸ், சாரதா காலேஜ் எதிரில், ஃபேர்லாண்ட்ஸ், சேலம்-636 009. 101 -105, டி.பி.ரோடு, ஆர்.எஸ்.புரம், கோயம்புத்தூர்-641 002. 536, சாய் காம்ப்ளக்ஸ், மெயின் ரோடு, திருப்பூர் 638 602. 25/B, இரண்டாவது மாடி, எஸ்.ஆர்.சி. காம்ப்ளக்ஸ், எஸ்.என். ஹை ரோடு, திருநெல்வேலி ஜங்ஷன் 627 001. 10, ஐந்தாவது குறுக்குத் தெரு, சுப்ரமணியபுரம், காரைக்குடி – 623 002. ரவீந்திரன் பில்டிங், 8/A முதல் மாடி, வள்ளல் பச்சையப்பன் தெரு, காஞ்சீபுரம் – 631 501. நெ. 8/B, கமிஷரி மார்கெட், சாக்ஸன் சென்டர், பூம்புகார் எதிரில், வேலூர் – 632 004. 105,3 புளூ கிராஸ் சேம்பர்ஸ், 11, இன்பேண்ட்ரி ரோடு கிராஸ், பெங்களூர் – 560001. போன் : 5591483. ஃபேக்ஸ் : 080 5591406. 234, அண்ணா சாலை, முதல் மாடி (ஸ்டேட் பேங்க் அருகில்), பாண்டிச்சேரி – 605 001. நெ. 50, ஏ.எஸ்.பி. காம்ப்ளக்ஸ், வெங்கட்ரமணன் தெரு, பொள்ளாச்சி-642 001. நெ.36, புதுத் தெரு, கரூர் – 639 001. நெ. 60/A, எ.எஸ்.பி. காம்ப்ளக்ஸ், இரண்டாவது மாடி, நாகேஸ்வரன் வடக்கு தெரு, கும்பகோணம் – 612 001. 1090/C, கச்சேரி ரோடு, மணிக்கூண்டு எதிரில், ஈரோடு – 638 001. மேப் மெயின் ரோடு, சத்ராஸ் மேற்கு, கல்பாக்கம் – 603 102.

Srichakra Coms./286/94




"இந்த மாதம் முதல்வர் ஜெயலலிதா திண்டுக்கல்லுக்கு வரவிருக்கிறார். பலருக்கும் பல்வேறு நலத்திட்ட உதவிகளைச் செய்ய இருக்கிறார். உங்கள் தொகுதியில் உள்ள யாருக்காவது உதவி செய்ய வேண்டுமென்று நீங்கள் அதிகாரிகளிடம் சிபாரிசு செய்திருக்கிறீர்களா?"

"இல்லை. நான் யாருக்காவது சிபாரிசு செய்தால் செல்வாக்குள்ள எனது கட்சிக்காரர்களே அதை அடித்து விட்டு வேறொரு லிஸ்ட் தயார் செய்து கொடுத்து விடுவார்கள். அதனால் இயல்பாகக் கிடைக்க வேண்டியவர்களுக்குக் கூட எனது சிபாரிசால் கிடைக்காமல் போய்விட வாய்ப்பிருக்கிறது என்பதால் நான் சிபாரிசு செய்யவில்லை."

"உங்கள் கட்சிக்காரர்களே அப்படிச் செய்ய வேண்டிய அவசியம் என்ன?"

"அதுதான் எனக்கும் தெரியவில்லை. எனக்கு சீட் கொடுத்து என்னை எம்.எல்.ஏ. வாக்கியது புரட்சித் தலைவிதான் என்பதால் நான் மற்றவர்களைப் பற்றிக் கவலைப்படுவதும் இல்லை."

"அதிகாரிகள் எப்படி? நீங்கள் குறிப்பிடும் குறைகளைச் சரி செய்ய நடவடிக்கைகள் எடுக்கிறார்களா?"

"நான் மாவட்ட வளர்ச்சி மன்றக் கூட்டத்தில் நிறையப் பிரச்சனைகளைப் பற்றிப் பேசுகிறேன். ஆனால் ஒன்றும் நடப்பதாகத் தெரியவில்லை."

"ஆக, உங்கள் தொகுதிக்கு நீங்கள் என்னதான் செய்திருக்கிறீர்கள்?"

"பெரிதாக ஒன்றும் செய்துவிட்டதாகச் சொல்ல முடியாது என்றாலும் தோல் பதனிடும் தொழிற்சாலைகளால் நிலத்தடி நீர் பாதிக்கப்பட்ட பள்ளப்பட்டி, ஜெ. புதுப்பட்டி ஆகிய கிராமங்களுக்குக் குடிநீர் கிடைக்க ஏற்பாடுகள் செய்திருக்கிறேன். இதை அந்த மக்கள் நன்றியோடு குறிப்பிட்டாலும் எனது கட்சிக்காரர்கள் இதையெல்லாம் பாராட்டுவதேயில்லை."

"திண்டுக்கல்லில் உள்ள வீடியோ கேம்ஸ் கடைகளால் நிறைய மாணவர்கள் கெட்டுப் போவதாகச் சொல்கிறார்களே, இது பற்றி நீங்கள் ஏதாவது புகார் செய்தீர்களா?"

"வீடியோ கேம்ஸ் மட்டுமல்ல; சட்ட விரோதமாக 'பார்'களும் நடைபெற்றுக் கொண்டுதான் இருக்கின்றன. இது பற்றி ஒரு முறை நான் போலீஸ் ஸ்டேஷனுக்கு போன்

**திண்டுக்கல் தொகுதி எம்.எல்.ஏ.வான திருமதி நிர்மலா தேவி (அ.இ.அ.தி.மு.க.) பயந்து பயந்து பேசினாலும் வெளிப்படையாகவே பேசுகிறார். தமது இயலாமையை ஒப்புக் கொள்கிறார்...**

செய்து நடவடிக்கை எடுக்கக் கேட்டுக் கொண்டேன். ஆனால் சம்பந்தப்பட்ட போலீஸ்காரர்கள் என்ன செய்தார்கள் தெரியுமா? நான் எனது தொகுதியிலுள்ள ஒவ்வொரு போலீஸ் ஸ்டேஷனுக்கும் டெலிபோன் செய்து, எனது தம்பியின் திருமணத்துக்காகத் தலா நாற்பதாயிரம் ரூபாய் வசூல் செய்து தரச் சொன்னதாகக் கதை கட்டி விட்டார்கள். அப்படி ஒரு பத்திரிகையிலும் செய்தி வரச் செய்து விட்டார்கள். இந்த நிலையில் நான் என்ன செய்ய முடிமென்று நினைக்கிறீர்கள்? மேலதிகாரிகளுக்கு நான் புகார் மனு அனுப்பினாலும் 'தங்கள் மனுவின் மீது உரிய நடவடிக்கை எடுக்கிறோம்' என்று அனைவருக்கும் அனுப்புகிற வழக்கமான பதில்தான் வருகிறதே தவிர, நடவடிக்கைகள் ஏதும் எடுக்கப்படுவதேயில்லை. அரசாங்கம் எனக்கு அடித்துக் கொடுத்திருக்கிற 'லட்டர் ஹெட்' எல்லாம் வீண் என்றுதான் தோன்றுகிறது."

"எம்.வி.எம். பெண்கள் கலைக் கல்லூரி அட்மிஷனில் முறைகேடுகள் நடந்ததாகச் சொல்லப்படுகிறதே. நீங்கள் ஏதாவது விசாரணைக்கு ஏற்பாடு செய்தீர்களா?"

"எனக்கும் முறைகேடுகள் நடந்திருக்குமென்றுதான் தோன்றுகிறது. இதுபற்றி நான் கல்வி அமைச்சருக்கும் புகார் கொடுத்தேன். அவரும் நடவடிக்கை எடுப்பதாகத்தான் கூறினார். ஆனால் ஒன்றுமே நடக்கவில்லை. என்ன காரணம் என்றும் எனக்குத் தெரியவில்லை."

"இப்படிப்பட்டதொரு சூழ்நிலையில் அடுத்த தேர்தலில் நீங்கள் போட்டியிடுகிற வாய்ப்புக் கிடைக்கும் போது, மக்களிடம் என்ன சாதனைகளைச் சொல்லி வோட்டுக் கேட்பீர்கள்?"

"நான் ஊழல் ஏதும் செய்யவில்லை என்பது என் தொகுதி மக்களுக்கு மிக நன்றாகவே தெரியும். அதனால் மற்ற சிலரைப் போல் இல்லாமல் நான் என் தொகுதி மக்களை எந்தவித பயமுமில்லாமல் போய்ச் சந்திக்க முடியும். அப்புறம் புரட்சித் தலைவியின் ஆசி. இதுவே எனக்குப் போதும்."

"திண்டுக்கல்லுக்கு வரப் போகிற முதல்வர் ஜெயலலிதாவுக்கு நீங்கள் அந்தத் தொகுதியின் எம்.எல்.ஏ. என்கிற முறையில் எப்படி வரவேற்புக் கொடுக்கப் போகிறீர்கள்? என்ன நினைவுப் பரிசு தரப் போகிறீர்கள்.?"

"அனைவரையும் பிரமிக்க வைக்கிற அளவுக்குக் கட்-அவுட்டுகள் வைக்கிற வசதியெல்லாம் எனக்குச் சுத்தமாகவே கிடையாது. இது புரட்சித் தலைவிக்கும் மிக நன்றாகவே தெரியும். அதனால் முழுக்க முழுக்க எனது சொந்தப் பணத்தைக் கொண்டு எந்த அளவுக்குச் செய்ய முடியுமோ அந்த அளவுக்குக் கண்டிப்பாகச் செய்வேன்!"

பேட்டி : **இளங்கோவன்**

படம் : **யோகா**

# என் கட்சிக்காரர்களே எனக்கு எதிராக இருக்கிறார்கள்!

# கலை மெய்ப்படும்

மெய்ப்படும்

# சுக ராகம்

**சுகி சிவம்**

ஒரு கல்யாண வீட்டில் பந்தியில் பரிமாறிக் கொண்டிருந்தவர், சாப்பிட்டுக் கொண்டிருந்த ஒரு நபரை உற்று உற்றுப் பார்த்தார். "உங்களை எங்கேயோ சமீபத்தில பார்த்த மாதிரி இருக்கிறதே" என்று இழுத்தார்.

"எங்க பார்த்திருப்பீங்க... போன பந்தியில பார்த்திருக்கலாம்" என்றார் சாப்பாட்டு ரசிகர்.

"எப்படி... அடுத்த பந்தியிலும் உட்காரும் எண்ணம் உண்டோ!" என்று கிண்டல் அடித்தார் பரிமாறுபவர்.

"அது நீர் பரிமாறுவதைப் பொறுத்திருக்கு... இந்தப் பந்தியிலாவது சரியாப் பரிமாறிட்டா அடுத்த பந்தியில உட்கார வேண்டிய அவசியம் இருக்காது" என்று ஒரு போடு போட்டார் சாப்பாட்டு ராமன்!

'தேடிச் சோறு நிதம் தின்று' என்று இத்தகையவர்களைப் பாட்டால் அடிக்கிறார் பாரதி. யோகம் கைகூட வேண்டும் என்றால் அளவான உணவு - அளவான உறக்கம் அவசியம் என்கிறது கீதை. மனிதன் வாழ்வதற்காக உண்ண வேண்டும். உண்ணுவதற்காக வாழக் கூடாது. மிகுதியாக உண்பவர்கள் அதைச் சீரணிப்பதிலேயே சோர்ந்து போகிறார்கள். குறைவாக உண்பவர்கள் உடம்பின் தேவையை ஈடு கொடுக்க முடியாது சோர்ந்து போகிறார்கள். எனவே மிதமான உணவு என்பதுதான் வாழ்க்கைக் கலை பயில்பவர்களின் உணவு முறை.

உறக்கமும் அப்படித்தான். சிலர், பஸ்ஸில், ரயிலில், பள்ளியில், சொற்பொழிவில் எங்கு வேண்டுமானாலும் தூங்குவார்கள். நின்றபடி, உட்கார்ந்தபடி.... எப்படி வேண்டுமானாலும் தூங்குவார்கள். கால நேரம் என்ற வரையறை இருக்காது... இவர்கள் நோயாளிகள். நினைத்தவுடன் தூங்கி, நினைத்தபடி விழிப்பவனை குடாகேசன் என்கிறது கீதை. நெப்போலியன் யுத்த களத்தில் குதிரை மீது சில விநாடிகள் தூங்கி ஓய்வு கொண்டு, திட்டமிட்டபடி விழித்துப் போர் செய்வான் என்று சொல்லுவார்கள். நம் கட்டுப்பாட்டில் உணவும் உறக்கமும் அமைவது மிக மிக அவசியம்.

உடம்பு வீணையைப் போன்றது என்கிறார் சுவாமி சித்பவானந்தர். வீணையின் தந்தியை அளவுக்கு அதிகமாக இறுக்கினால் அது உடைந்து போகும். மிகவும் இளக்கினால் அதில் ஓசையே வராது. இந்த வாழ்வை 'நல்லதோர் வீணை' என்கிற பாரதி தத்துவம் இங்கே நினைவில் வரட்டும். நமது உடல் யோக சாதனம். அதைச் சரியாக மீட்டினால் வீணையின் நாதம் போல் சுக ராகம் மீட்டலாம். தாறுமாறாக வைத்துக் கொண்டால் அபஸ்வரம் பேசும் ஆபத்து உண்டு.

இப்படி உடம்பையும் உள்ளத்தையும் ஒழுங்குபடுத்தவே கீதையில் ஆறாம் அத்தியாயம் யோகம் பயில அழைக்கிறது. யோகம் செய்யும் முறையை விளக்குகிறது. யோகாசனம் என்றதும் மயில் போல பாம்பு போல கைகால்களைத் திருகிக் கொள்ளும் பலவித ஆசனங்களை எண்ணி பயப்பட வேண்டாம். அவை வெவ்வேறு காரணங்களுக்காக உருவாக்கப்பட்டவை.

எளிய முறையில் உடல், தலை, கழுத்து, இவற்றை நேராகக் கொண்டு (முதுகுத் தண்டு வளையக் கூடாது) அசையாது நிறுத்தி தன் நாசியின் நுனியைப் பார்ப்பவன் போன்று அமர்ந்து, திசைகளைப் பாராதிருக்க கீதை வற்புறுத்துகிறது. முதுகுத் தண்டு நேராக இருந்தால் மூளைக்கு ரத்த ஓட்டம் சீராக இருக்கும். சிந்தனை தெளிவாக இருக்கும். பள்ளிக் கூடத்தில் "நேரா உட்கார்" என்று வாத்யார் புலம்புவதும் இதற்காகத்தான். மூளைக்கு ரத்த ஓட்டம் எளிமையாக இருந்

# ...ீட்டுவோம்!

புலன் அடக்கம், பிரம்மச்சர்யம், இவை ஒழுக்கக் கட்டுப்பாடு **(moral ethics)** மட்டும் அல்ல. அது வாழ்வியல் முறை **(Life style)**. அதுவே எய்ட்ஸுக்குத் தடுப்பு மருந்து என்பது சயின்ஸ் கண்ட உண்மை.

தால் சிந்தனை கலபம்.

மேலும் நேராக உறுதியாக அமர்ந்தால் சுவாசம் சீராகும். சுவாசம் சீரானால் மனசு சீராகும். இது கருதியே மனோவேகம் வாயு வேகம் என்கிறார்கள். உடற்பயிற்சிக்கும் யோகாசனத்துக்கும் முக்கியமான வேறுபாடு இதுதான். உடற்பயிற்சி உடம்பை மட்டும் பலப்படுத்தும். யோகாசனம் உடம்போடு உள்ளத்தையும் வலுப்படுத்தும். உடற்பயிற்சி விட்டமின் சி மாத்திரை போல. யோகாசனம் நிறமும் மணமும் சுவையும் கொண்ட அன்னாசிப் பழம் போல... எனவே மனோ பலம், சிந்தனையாற்றல் விரும்பும் நண்பர்கள் யோகாசனம் பயில வேண்டும். பொறிகள் புலன்கள் மனம் நம் வசப்படும். வாழ்க்கை சீராகும்.

பிரம்மச்சர்யம் மிக மிக அவசியம். பன்னிரண்டு ஆண்டுக்காலம் பிரம்மச்சரிய நெறியில் இருப்பவர்கள் மேதா நாடி என்ற ஒன்றைப் பெறுகிறார்கள் என்கிறார் பகவான் இராமகிருஷ்ணர். இதற்கு சாட்சி விவேகானந்தர். பிரம்மச்சர்யத்தால் மனிதன் பல ஞானம் பெற முடிகிறது என்பதற்கு அவர் அடையாளம். 'ஒரு மனிதனால் ஒன்று முடியும் என்றால் அது எல்லா மனிதனாலும் ஏன் முடியாது' என்று முழங்கியவர் சுவாமி விவேகானந்தர். பிரம்மச்சர்யத்தின் மேதா நாடியில் மேன்மை பெற்றவர் அவர். புலன் அடக்கம், பிரம்மச்சர்யம், இவை ஒழுக்கக் கட்டுப்பாடு (moral ethics) மட்டும் அல்ல. அது வாழ்வியல் முறை (Life style). அதுவே எய்ட்ஸுக்குத் தடுப்பு மருந்து என்பது சயின்ஸ் கண்ட உண்மை. அதுதான் சரியான வாழ்க்கை முறை என்பது இந்தியப் பெருஞானம். இளைஞர்கள், கஷ்டமாக இருந்தாலும் இதைக் கடைப் பிடிப்பது அவசியம். பிரம்மச்சர்யம் உடம்பை விட உள்ளத்தை வலுப்படுத்தும் உன்னத சக்தி.

இத்தகைய யோகியின் மனம், காற்றில்லாத இடத்தில் வைத்த தீபம் போல ஆடாது அசையாது ஒளி வீசும் என்கிறது கீதை. இந்த யோகம் மூலம் மனத்தை வசப்படுத்திய பிறகு, உலக வாழ்வில் அடியெடுத்து வைக்கவும் தொழில் படவும் கீதை வற்புறுத்துகிறது. ஒரு யோகி, யோகி அல்லாதவன் இருவரும் தொழிற்படுவது தவிர்க்க முடியாது. ஆனால் இருவர் தொழிலுக்கும் என்ன வேறுபாடு? யோகியின் செயலில் முழுமை (Perfection) பின் விளைவுகளால் பாதிக்கப்படாத சம நிலை இருக்கும். சராசரி மனிதன் செயலில் பதற்றம், எதிர் பார்ப்பு, அது பலனளிக்காத போது சோர்வு, குழப்பம், அல்லது பலனளித்தால் அபரிமிதமான ஆனந்தம் அதன் விளை வான இதயபலவீனம் எல்லாம் இருக்கும்.

உடலையும் உள்ளத்தையும் நம் வசம் வைத்துக் கொண்டு, தொழிலில் இருந்து விலகாமல், அதன் பலனில் இருந்து விலகி நன்றாகத் தொழிற்படுவதே கீதை காட்டும் பாதை.

(தொடரும்)



டெலிமா நியூஸ்! (சினிமாக்காரங்க டீ.வி.க்குப் படையெடுக்கறதால இந்தத் தலைப்பு!)

# ஒரு நிலாப்பெண்ணின் வாழ்க்கை டீ.வி. தொடராகிறது!

• நிலாப்பெண்ணாகக் காவேரி...

●● ஹிந்தி டீ.வி. தொடர்களைப் 'பிடி வாத'மாகத் தமிழாக்கம் செய்து, புதுத் தமிழ் புகுத்தியவர் மூர்த்தி. இப்போது நல்ல தமிழ் சீரியல்களை இந்தியாக்கம் செய்து வட இந்தியாவில் ஒளிபரப்பினால் என்ன? என்று யோசித்து வருகிறார். சன் டீ.வி.க்காரர்களுடன் பேச்சு வார்த்தை நடக்கிறது. ரசிக்கட்டுமே நம்ம தொடர்களை அவங்களும்!

●● மறைந்த நடிகை திவ்யபாரதியின் வாழ்க்கை, 'நிலாப் பெண்' என்ற தொலைக்காட்சித் தொடராக உருவாகிறது. இயக்குபவர் மணிரத்னத்திடம் அசோசியேட்டாக இருந்த ராஜ பாண்டியன். "இது ஒரு நட்சத்திர நடிகையின் கதை" என்று மட்டுமே ராஜபாண்டி சொன்னாலும், திவ்யபாரதியாக நடிக்கவிருக்கும் காவேரி, கொஞ்சம் குட்டை உடைத்து விட்டார். மகாநதி ஷோபனா, மௌனிகா போன்றவர்களும் நடிக்கும் இந்த சீரியலில், நடிகையின் கதையைத் தொடராக எழுதும் நாவலாசிரியராக ஜெமினி கணேசன் நடிக்கிறார்!

●● முன்னாள் குடியரசுத் தலைவர் ஆர்.வி. எழுதிப் புயலைக் கிளப்பிய "My Presidential Years" புத்தகத்தை விரைவில் தமிழில் வெளிக் கொணரப் போகிறது அல்லயன்ஸ் பதிப்பகம். மொழிபெயர்ப்பவர் யார் தெரியுமா? சோ!

●● வீராவின் 150 வது நாள் விழா ஏ.வி.எம். ராஜேஸ்வரி மண்டபத்தில். வெள்ளை அரைக் கை சட்டை, வெள்ளை வேட்டி சகிதம் ரஜினி மனைவியுடன் ஆஜர். விழாவில் நட்சத்திரப் பட்டாளம். மேடையில் அரைவட்டமாய் அனைவரும் அமர்ந்திருக்க, நடுநாயகமாய் கே.பி.யும் (தலைமை) ரஜினியும். ஷூட்டிங்கிலிருந்து காக்கி யூனிபாரம் 'காஸ்டியூம்'லேயே விழாவுக்கு வந்திருந்தார் சத்யராஜ். இந்தியன் வங்கித் தலைவர் எம். கோபாலகிருஷ்ணன், "இன்று நாட்டில் பரபரப்புடன் பேசப்படும் இரண்டு விஷயங்களில் ஒன்று தளர்த்தப்பட்ட பொருளாதாரக் கொள்கை. இன்னொன்று இறுக்கப்பட்ட சென்சார் கொள்கை" என்றவுடன் பலத்த கைதட்டல்.

விழாவில் சில நிமிடங்களே இருந்த இளையராஜாவை பேச அழைத்தார்கள். "நான் என்ன பேசினால் நீங்கள் எல்லாரும் கைதட்டுவீர்கள் என்று எனக்குத் தெரியும்!" என்று கூறிவிட்டு, ரஜினி, சூப்பர் ஸ்டார், வீரா, பாட்சா என்ற சில வார்த்தைகளையே திரும்பத் திரும்பச் சொல்ல, பலத்த கைத்தட்டல். "ரஜினி வாழ்க!" என்று தன் உரையை முடித்து விட்டு, டாட்டா சொன்னார்.

"இனி பெரிய பட்ஜெட் படங்களைத் தவிர்த்து, சிறு பட்ஜெட் படங்களைத் தயாரியுங்கள்!" என்று ரஜினி பஞ்சு அருணாசலத்தைக் கேட்டுக் கொண்டார்.

●● காதிகிராமோத்யோக் பவனில், முந்தைய வருடங்களைப் போலவே, இந்த வருடம் நவராத்திரி கொலு கண்காட்சி, விற்பனை. கண்காட்சியைத் துவக்கி வைத்த அமைச்சர் இந்திராகுமாரி, ஆறாயிரம் ரூபாய்க்கு பொம்மை வாங்கிச் சென்றாராம். அந்த அளவுக்கு என்ன ஸ்பெஷல்? காமாட்சி தங்கரதம், பழனி தங்கரதம், மீனாட்சி கல்யாணம், கருடசேவை என்று ஆன்மீகம் தவிர, பதினாறு பொம்மைகள் கொண்ட பல்வேறு மாநில இந்தியப் பெண்கள், அறிவொளி இயக்கம், விண்வெளி ஆராய்ச்சி நிலையம், வடதுருவ எஸ்கிமோ குடும்பம், அராபிய பாலைவனம்... எக்ஸ்ட்ரா! பெரீரீய கொலுதான் போலிருக்கு! அம்மா விசிட் வருவாங்க போல?

– ஹர்ஷராஜ், எஸ். சந்திரமௌலி

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர்: வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: சீதா ரவி. நிர்வாக ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம்: 2345624; சர்க்குலேஷன் மானேஜர்: 2345623; விளம்பரம் - சந்தா: 2345622; டைரக்டர்: 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு: ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால்: ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு: ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால்: ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

# மகாநிதி




ஆழ்வார்பெட் பெனி:ஃபிட் :ஃபண்ட் - 3 வருட டெபாசிட்டுகளுக்கு 21% வரை வட்டி வழங்குகிறது. அந்த வட்டியும் மாதம்தோறும் அளிக்கப்படுகிறது. இதை நிலையானதொரு வருமானம் போலவே நீங்கள் பெற்று மகிழலாம். ABFL 10,000-க்கு மேற்பட்ட உறுப்பினர்களுடன், நற்பெயரும் நன்மதிப்பும் பெற்ற நல்லதொரு நிதி நிறுவனம் ஆகும். இது மிக மகத்தானதொரு வளர்ச்சியைக் கண்டிருக்கிறது - டெபாசிட்டுகளில் 19 மடங்கு உயர்வு... மேலும் மூலதனம் மற்றும் ரிசர்வுகளில் 280% உயர்வு... அதுவும் மிகக் குறுகிய காலத்தில்! வீட்டு வசதிக் கடன்கள், நகைக் கடன்கள், பிக்சட் டெபாசிட், இரட்டைப் பயன் (Double Benefit) டெபாசிட் மற்றும் பென்ஷன் தாரர்களின் பெட் டெபாசிட் திட்டங்கள் போன்ற பலப்பல திட்டங்களை இந்த நிறுவனம் அளிக்கிறது.

## வீடுகளின் பேரில்
## க ட ன்

- சென்னை நகர எல்லைக்குள் உள்ள :ஃபிளாட்டுகள் / வீடுகளுக்கு
- பூர்த்தி செய்ய வேண்டிய படிவங்கள் மிகக் குறைவு
- விரைவாகப் பரிசீலனை செய்து வழங்கப்படும்
- கடனைத் திருப்பிச் செலுத்த இணக்கமான திட்டம்




நம்பிக்கைக்குரிய நிதி நிறுவனம்

**ஆழ்வார்பெட் பெனி:ஃபிட் :ஃபண்ட் லிமிடெட்**

கூட்டாண்மை அலுவலகம் : 43-B, சி.பி. ராமசாமி ரோடு
ஆழ்வார்பேட்டை, சென்னை 600 018
தொலைபேசி : 499 4809
உறுப்பினர்களுக்கு மட்டும்

கிளைகள் : • அண்ணாநகர் • அடையாறு • அசோக் நகர் • தி. நகர் • நங்கநல்லூர் • தாம்பரம் • ஜார்ஜ் டவுன் • பாண்டிச்சேரி • கோயம்புத்தூர் • ஈரோடு.

